# கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு

**முனைவர் அ. அறிவுநம்பி**

*தமிழ்ப் பேராசிரியர்,*

*இயக்குநர் - கல்வியாளர் உயர்ப்பயிற்சிக் கல்லூரி,*

*புதுவைப் பல்கலைக்கழகம்,*

*புதுச்சேரி - 605 008.*



தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தில் 10.1.1999 அன்று ஆற்றிய ஈரோடு மாவட்டம் சாமராசபுரம் முத்துக் கருப்பப் பண்ணாடி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவின் விரிவாக்கம்

**வெளியீடு**

**தமிழர் பண்பாடு, சமூக ஆய்வு மன்றம்**

*10/2, நால்வர் நகர்*

*பாரதியார் பல்கலைக்கழகம்*

*கோயமுத்தூர் - 641 046.*

*ஆகஸ்டு 1999*

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | கம்பர் காட்டும் மன்னர் மாண்பு |
| ஆசிரியர் | : | பேராசிரியர் முனைவர் ஆ. அறிவுநம்பி |
| வெளியீடு | : | தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்<br>10/2, நால்வர் நகர்<br>பாரதியார் பல்கலைக்கழகம் (அஞ்சல்)<br>கோயமுத்தூர் - 641 046. |
| வெளியீடு எண் | : | நான்கு |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம் |
| பொருள் | : | சமூகப் பண்பாடு ஆய்வு |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பாண்டு | : | ஆகஸ்ட், 1999 |
| நூல் அளவு | : | 1/8 |
| அச்சு அளவு | : | 11 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 104 |
| விலை | : | ரூபாய் 30/- |
| அச்சகம் | : | மாமன்னர் அச்சகம்<br>10/2 A, நால்வர் நகர், மருதமலைரோடு,<br>பாரதியார் பல்கலைக்கழகம் அஞ்சல்,<br>கோயமுத்தூர் - 641 046. |

# ஈரோடு மாவட்டம் சாமராசபாளையம் முத்துக்கருப்பப் பண்ணாடி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு — 10.1.1999



தேவேந்திர குல வேளாளர்

**அமரர் முத்துக் கருப்பப் பண்ணாடி**

**தோற்றம் : 1906** **மறைவு : 8.1.1997**

பாட்டு வாத்தியார், சிலம்பு வாத்தியார் எனப் பெயர் பெற்ற முத்துக்கருப்பப் பண்ணாடி அவர்கள் நல்ல குரல் வளம்மிக்கவர். கும்மிப் பாடல்கள் பாடுவதில் வல்லவர். இசையுடன் கூத்துப் பாடல்கள் பல பாடி மக்களை மகிழ்விப்பார். இவருடைய ஒயிலாட்டம், கும்மிப்பாட்டு சுற்றுவட்டாரத்தில் மிகவும் பிரபலமாக இருந்தன. சிலம்பு சுற்றுவதில் வல்லவர். நூற்றுக் கணக்கானவர்களுக்கு சிலம்பாட்டம், ஒயிலாட்டம் கற்றுத் தந்துள்ளார். கரும்புச் சக்கரை, வெல்லம் பதம்பார்ப்பதில் நிபுணர். சுற்றுவட்டார கரும்பு விவசாயிகள் இவரைப் போட்டி போட்டுக் கொண்டு அழைத்துச் செல்வர். இவருடைய பாடல்களில் ஒன்று

எல்லாரும் நடக்கும் தடம் கல்லுத்தடம் முள்ளுத்தடம்
குடும்பனார் நடக்கும் தடம் சரியான ரோட்டுத் தடம்
எல்லாரும் கட்டும் வேட்டி நூலு வேட்டி கதரு வேட்டி
குடும்பனார் கட்டும் வேட்டி சரியான கம்பி வேட்டி
எல்லாரும் குடிக்கும் தண்ணி ஆத்துத் தண்ணி கொளத்துத் தண்ணி
பண்ணாடி குடிக்கும் தண்ணி சரியான கள்ளுத் தண்ணி

இவருடைய மகன் திரு. ச. சண்முகம் தேவேந்திரர் B.Sc. (Agri) சிண்டிகேட் வங்கியில் மேலாளராகப் பணிபுரிகிறார். இவருடைய இரண்டு பேரன்கள் ச. பிரதீப் தேவேந்திரர், ச. வசந்த் தேவேந்திரர் சாதனையாளர்களாக உருவாகிக் கொண்டிருக்கிறார்கள்.

## படையல்

மண்ணைப்
பொன்னாக்குவதற்காகத்
தங்களின் பொன்னுடம்பை
மண்ணாக்கிக் கொண்டு
உழுதுண்டு வாழும்
மள்ளர் பெருமக்களுக்கு

## உள்ளே இருப்பவை

# அணிந்துரை

**இன்ஜினியர் முனைவர் குருசாமி சித்தர்**
*தலைவர், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம*
*10/2 நால்வர் நகர், கோயமுத்தூா - 641 046.*

தமிழ்ச் சங்க கால இலக்கியங்களான புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து, குறுந்தொகை, ஐங்குறுநூறு, நற்றிணை, கலித்தொகை, பரிபாடல், பத்துப்பாட்டு, தகடூர் யாத்திரை முதலியனவும் காப்பியங்களான சிலப்பதிகாரம், பெருந்தொகை, சூளாமணி, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் முதலியனவும் புராணங்களான பெரியபுராணம், கந்தபுராணம், விநாயக புராணம், திருவிளையாடற் புராணம், பேரூர்ப்புராணம், ஆற்றூர்ப் புராணம், சங்கர நாராயணசாமி கோயிற் புராணம், அரிச்சந்திர புராணம், திருவாரூர்த் தியாகராச லீலை முதலியனவும் சுமார் 70-80 எண்ணிக்கையில் கிடைத்துள்ள அனைத்துப் பள்ளு இலக்கியங்களும், தேவாரம், திருவாசகம், ஞானாமிர்தம், திருவகுப்பு, கொங்கு மண்டலச் சதகம், பழனிப் பிள்ளைத் தமிழ, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், தேம்பாவணி போன்ற இலக்கியங்களும் மருத நில மக்களான மள்ளர் குலத்தினரைப் புகந்து விரிவாக இசைக்கின்றன.

மள்ளர் என்னும் தேவேந்திர குல வேளாளர்களின் வரலாறும் பண்பாடும் தமிழினத்தின் வரலாறாகவும் பண்பாடாகவும் உள்ளதை இந்தத் தமிழ் இலக்கியங்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. நமக்குக் கிடைக்கக் கூடிய பழமையான சங்க இலக்கியங்களின் காலந் தொடங்கி இந்த நூற்றாண்டு வரை தொடர்ந்து பெரிதும் பேசப்படுகிற சிறப்பு மிக்க வரலாறு கொண்ட தமிழினம் மள்ளர் இனம்.

பல தமிழ் அறிஞர் பெருமககள் பண்பாட்டியல், மானுடவியல், தொல்லியல், நாட்டார் வழக்காற்றியல், கல்வெட்டியல் நோக்குகளில் இத்தமிழர் பற்றிய ஆய்வுகள் மேற்கொண்டு இவர்களின் மாண்புகளை, சிறப்புகளை, பெருமைகளை வெளிக் கொண்டு வநது கொண்டிருக்கின்றனர்.

முனைவர் குருசாமி சித்தரின் "தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிபபடைச் சானறுகள) - 1993 என்ற நூலும் மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பேராசிரியர் மறறும் தமிழியற்புல ஒருங்கிணைப்பாளர் முனைவர் சு. வேங்கடராமனின் "பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள்" எனற நூலும தமிழ் இலககியங்களிலிருந்து சானறுகளைக் கொடுத்து மள்ளர்களின் மாண்புகளைச் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன.

தமிழ் இலக்கியங்களிலிருந்து தமிழ் மக்களின பண்பாடுகளையும் வரலாறுகளையும் வெளிக் கொண்டு வரவேண்டும் என்ற இந்தப் புதிய நோக்கில் கம்பர் தமது இராமாயணத்தில் தமிழ் மள்ளர் குலத்தினரை எப்படிச் சித்தரிக்கிறார் என்பதை விரிவாக ஆராய்ந்து தமிழறிஞர் முனைவர் அ. அறிவுநம்பி அவர்கள் 'கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு' என்னும் இந்த ஆய்வு நூலில் வெளிக்கொண்டு வந்துள்ளார்.

தமிழ்ப் பண்பாடு, தமிழர் மாண்புகள், தமிழர் வரலாறுகள் சிறப்புற வெளிப்பட இத்தகைய பல நூல்கள் தமிழ்ச் சமுதாயங்களைப் பற்றி வெளிவரவேண்டும். அப்போதுதான் தமிழர் மாண்புகள் உலகுக்குத் தெரியவரும். குறுகிய சாதியக் கண்ணோட்டங்களினால் ஒரு பெருமைமிக்க மூத்த தமிழ்ச் சமுதாயத்தின் வரலாறுகளையும் மாண்புகளையும் மறைப்பதும் தெரிந்து கொள்ளாமல் இருப்பதும் தமிழர்க்கு, தமிழர் எழுச்சிக்குப் பெரிய இழப்பாகவும் இடையூறாகவும் அமைந்துவிடும்.

இவைகளை உணர்ந்து தமிழ் அறிஞர் முனைவர் அ. அறிவுநம்பி அவர்கள் கம்பர் காலமான 12-ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் இக்குலத்தினர் எப்படிச் சிறப்பாகத் தமிழ்ப் பண்பாடுகளைப் போற்றி வாழ்ந்தார்கள் என்பதை இந்நூலில் நமக்கு எடுத்துக் காட்டுகிறார். தமிழர் பண்பாடு, சமூக ஆய்வு மன்ற "முத்துக் கருப்பப் பண்ணாடி நினைவுச் சொற்பொழிவின்" விரிவாக்கமான இந்நூல் தமிழர் பண்பாடு ஆய்விற்கு அடித்தளமாக அமைகிறது. அறக்கட்டளை நிறுவி இந்நூல் வெளிவருவதற்கு உதவிய திரு. மு. சண்முகம் தேவேந்திரர் அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஆசிரியருக்கு எங்கள் பாராட்டுதல்களையும் நன்றியையும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**கோயமுத்தூர்**
**2.8.1999**

**குருசாமி சித்தர்**

# முன்னுரை

டாக்டர் தே. ஞானசேகரன்
முதுநிலைத் தமிழ்விரிவுரையாளர்
பாரதியார் பலகலைக்கழகம்
கோவை - 641 046.

மருத நில மக்களான மள்ளர்கள் நெல்லின் மக்கள் என்றும் செந்நெல் முதுகுடியினர் என்றும் ஏருடன் பிறந்தவர்கள் என்றும் மழையின் மைந்தர்கள் (இந்திரனின் மக்கள்) நீராணிக்கர் என்றும் நீர்க்கட்டி என்றும், நீர் மூப்பர் என்றும் பண்டைக் காலம் தொட்டு இன்றுவரை புகழப்படுபவர் ஆவர். இம்மக்களின் முன்னோரே அதாவது பண்பாட்டுத் தலைவன் (Culture Hero) தான் நெல்லைப் பூமிக்குக் கொண்டுவந்தான். இம்மருத நில உழவர் தலைவன் வேளிர் என்று அழைக்கப்பட்டான். இவ்வேளிர் பின்பு வேந்தர் ஆனான். "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்று மருதநிலம் இதனாலே தொல்காப்பியரால் சுட்டப்பட்டது. இவ்வேந்தன் மருதநில மக்களின் முன்னோராகவும், மன்னராகவும், கடவுளாகவும் ஆனான். மழை வேண்டியும் வேளாண் வளம் வேண்டியும் வழிபடப்பட்ட மழைக் கடவுளான வேந்தன் பின்னால் ஆரியக் கலப்பால் தேவேந்திரன் ஆனான். இன்று இம்மக்கள் தங்களைத் தேவேந்திர குல வேளாளர் என்று அழைத்துக் கொள்வது இதனாலேயே ஆகும்.

உலகில் நாகரிகமும் அரசும் ஆற்றங் கரை நாகரிகத்தில் தொடங்கியது என்பது உண்மை. அதன்படி பார்த்தால் ஆறும் ஆறு சார்ந்த பகுதியில் நெல் வேளாணமை செய்த இம் மருதநில மக்களிடம் தான் முதன் முதலில் குடும்பம் என்ற அமைப்பும், ஊர், நாடு என்ற அமைப்பும் தோன்றி படிப்படியே அரசுகள் (State Formation) தோன்றின. இதற்கு ஆதாரம் இம்மக்கள் இன்றும் பலகான், பண்ணாடி, காலாடி, குடும்பன், குடும்பனார் என்று சாதியப் பெயரால் அழைக்கப்படுவதுதான். இத்தகைய பண்பாட்டுச் சொல்லை தமிழ்ச் சமூகத்தில் வேறு எங்கும் பார்க்க முடியாது. இன்றும் இம்மக்கள்தான் நெல் வேளாண்மையிலும், நீர் மேலாண்மையிலும் முதன்மைபெற்று விளங்குகின்றனர். நெல் வேளாண்மை குறித்து எழுந்த ஆயிரக்கணக்கான பள்ளு நூல்கள் இம்மக்களைத்தான் தலை மக்களாக்கியுள்ளது. இதிலிருந்தே அம்மக்கள்தான் நெல் வேளாண்மைக்குரியவர்கள் என்பதைத் தெரியமுடியும்.

தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் மருத நில வருணனை என்றால் இம்மக்களின் வாழ்க்கையே பாடு பொருளாக அமைவதைக் காணலாம்.

கம்பன் தனது இராமாயணத்தில் சோகல நாட்டு மருதநில வருணனையில இங்குள்ள வேளாண் மக்களான மள்ளர் மனதில் கொண்டே பாடியிருக்கின்றார் என்று பேராசிரியர் நா. வானமாமலை குறிப்பிடுவதை இங்கு நினையலாம். இவ்வாறு மருதநிலத்தில் உழவர்களாக வாழ்ந்த இம்மக்கள் போர்க்காலங்களில் வீரர்களாகவும் மாறிப் போரிட்டனர். இதனால் இம்மக்களைச் சங்க இலக்கியம் ஏர்க்கள மள்ளரும் போர்க்கள மள்ளரும் என்று போற்றும். சங்க இலக்கியங்களில் வீரம், வீரர் என்ற சொல்லே இல்லை. அதற்குப் பதில் மள்ளர் என்ற சொல்தான் காணப்படுகின்றது என்று சொல்லும் ஒப்பியல் அறிஞர் மேஜர் கதிர் மகாதேவனின் கருத்து இங்கே நினையத்தக்கது.

இத்தகைய பெருமைமிக்க மள்ளர் சமூகம் தமிழகத்தில் நாயக்கர் ஆட்சிக்காலத்தில் தனது ஆட்சியுரிமையை இழந்ததைத் தமிழக வரலாறு நமக்குக் காட்டும். தமிழ் இலக்கியத்தையும் தமிழக வரலாற்றையும் ஆராய்ந்து எழுதும் அறிஞர் பெருமக்கள் மள்ளர்களை இன்றைய தேவேந்திர குல வேளாளர்களின் வேளாண் மற்றும் வீர மரபோடு இணைத்து எழுதவேண்டும். அப்பொழுதுதான் தமிழகத்தின் உண்மையான வரலாறு புலப்படும். தமிழில் சாதி என்ற சொல்லே இல்லை. வடமொழியில் உள்ள ஜாதி எனும் சொல்லே தமிழில் சாதி என்ற சொல்லாக அமைநதது. சஙக காலத்தில் குடி, குலம் என்று சொற்களாலேயே மக்கள் பிரிவுகள் அறியப்பட்டன. தமிழர்கள் சாதிப் பிரிவுகள் தொழிலடிப்படையில் அமைந்தது ஆகும். இத்தொழிலடிப்படையில் காணப்பட்ட குலங்களுக்குள் ஏற்பட்ட பிரிவுகளும் இக்குலப் பிரிவுகளுக்குள் ஏற்பட்ட இறுக்கமுமே பின்பு சாதிகளாக உருமாறின. மருத நில மக்களான மள்ளர்கள் தமது தொழிலால் உழவர், மள்ளர் (வீரர் - உழவர்) களமர், கடையர், கடைசியர், ஆற்றுக் காலாட்டியார் என்று அழைக்கப்பட்டனர். இத்திணை அடிப்படையிலான தொழிலில் குறிப்பாக உழவுத் தொழிலில் ஏற்பட்ட சாகுபடிப் பிரச்சனைதான் இன்றைய இம்மக்களின் வீழ்ச்சிக்குக் காரணம்.

அக்காலத்தில் நீர், ஆற்றங்கரை நிலம் வைத்திருப்பவரே செல்வந்தர்களாகக் கருதப்பட்டார். குறிப்பாக செந்நெல விளையும் மருதநிலத்தைக் கைப்பற்றுவதே பிற இனமக்களின் வெற்றியாகக் கருதபபட்டது. இதனடிப்படையில் இம்மக்களைப் போரில் வென்று ஆறறஙகரையிலிருந்து அப்புறப்படுத்த நடந்த பல முயற்சிகளில் ஒன்றுதான் பள்ளு நூல்கள் சித்தரிக்கும் வேளாண் தொழிலாளிப் பிரிவாகும். இருப்பினும் இம்மக்கள தஙகளின் பண்பாட்டுக் கூறுகளை முழுமையாக இழந்துவிடவில்லை. சிறு சிறு விவசாயிகளாக வாழ்ந்து அநீதிக்கும், ஆதிக்கத்திற்கும் எதிராகப் பேராடிவரும் வேளாண் மரபையும், வீர

மரபையும் இன்றும் காணமுடியும். இத்தகைய ஒரு பண்பாட்டுத் தேடலை டாக்டர் அ. அறிவுநம்பி அவர்கள் "கம்பர் காட்டும் மள்ளர் மாண்புகள்" எனும் நூலில் நிகழ்த்தியுள்ளார். இலக்கியங்களில் பேசப்படும் மக்கள் இம்மண்ணில் வாழ்ந்த மக்களின் பிரதிபிம்பமே எனும் உண்மையின் அடிப்படையில் கம்பர் தனது இராமாயணப் படைப்பில் காட்டும் மள்ளர்களின் வேளாண், வீர மரபை இந்நூல் மிக நுணுகி ஆராய்கின்றது.

கம்பர் 'மள்ளர்' என்போரை ஒரு இனமாகவே குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

**"குன்றுடைக் குல மள்ளர் குழு உக்குரல்"**

*(கமபராமாயணம், காலகாண்டம், நாட்டுப்படலம் பா. 32)*

**"இன மள்ளர் பரந்த கையில்"**

*(யுத்த காண்டம், வாணரர் களம் காண்படலம், பா. 25)*

மருதநில உழவராகவும், போர் மறவராகவும் கம்பரால் சித்தரிக்கப்படும் மள்ளர்கள் வெள்ளத்திலிருந்து மக்களைக் காப்பவர்களாகவும், இந்த உலகம் வாழ உணவு கொடுத்து வாழ்பவர்களாகவும் காட்டப்படுகின்றனர். இம்மருதநில மள்ளர்களின் அதாவது வேளாளர்களின் வீட்டில் உண்பதுதான் விருந்து என்றெல்லாம் பாடுவார். இவ்வாறு பெருமை பெற்று வாழும் இவர்கள் நெற்களங்களில் யானைகள் எப்பொழுதும் நெற் போரினை மிதித்துக் கொண்டே இருக்கும். மலரிலிருந்து தேன் எடுப்பது போன்று பிறரிடமிருக்கும் பொருளை மென்மையாகவே நெல்லுக்குப் பதிலாகப் பெறுவர். தேனீயைவிட மென்மையானவர்கள் என்று குறிப்பிடுவதைக் காண்கின்றோம். இவ்வாறு தமிழ்ச் சக்கரவர்த்தி கம்பனால் புகழப்படும் வேளாண் மக்களான மள்ளர்களின் சமூகப் பண்பாட்டு வரலாற்றினை தமிழ் இலக்கியம் மற்றும் வரலாறுகளிலிருந்து மீட்டுருவாக்கம் செய்து தமிழர்களின் சமூக விடுதலைக்காகப் பாடுபட்டு வரும் தமிழர் பண்பாடு சமூக ஆய்வுமன்றம் சார்பில் வெளிவரும் இந்நூல் டாக்டர் அ. அறிவுநம்பி அவர்களால் 10.1.1999 அன்று ஈரோடு சாமராச பாளையம் முத்துக்கருப்ப பண்ணாடி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவில் நிகழ்த்திய உரையாகும். இதனை வெளியிடுவதில் தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம் பெருமை கொள்கிறது. இந்நூலை உரிய காலத்தில் உருவாக்கித் தந்த டாக்டர் அ. அறிவு நம்பிக்கு எங்கள் நன்றிகள். இந்நூலை தமிழ்கூறும் நல்லுலகம் ஏற்றுப் போற்றும் என்று நம்புகிறேன்.

**கோயமுத்தூர்**
**3.8.1999** **டாக்டர் தே. ஞானசேகரன்**

# களம் புகுமுன்

**வணக்கம்**

கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ வளர்த்த ஊர் காரைக்குடி. ஆண்டுக்கொருமுறை கிராமத்தில் திருவிழா நிகழும். காரைக்குடியில் 'கம்பன் திருநாள்' நிகழும். ஊரார் கூடி அவ்விழாவை நடத்தியது பேருண்மை. மீனாட்சி சுந்தரேசுவரர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியின் விளையாட்டுத் திடல் கம்பன் திருநாளின் மூன்று நாட்களும் அயோத்தியாய், இலங்கையாய், மிதிலையாய் இன்னபிற பகுதிகளாய்ப் பொலிவு பெறும். கம்பன படைத்த கதைமாந்தர்களைக் கண்முனனால் சொல்லைக் கொண்டே காட்டமுடியும் என்பதைப் பொழிஞர்கள் மெய்ப்பித்துக் கொண்டிருந்த காலம் அது. நீளமாகவும் அகலமாகவும் அமைக்கப் பெற்றிருந்த பந்தல் கொள்ளாமல் திடலின் மையத்திலிருந்த அரச மர நிழல்களில் - நீண்டு பருத்தமைந்த வேர்ப்பகுதிகளில் அமர்ந்தவண்ணம் கம்பனின் செவிநுகர் கனிகளைச் செவிகளில் சேகரித்துக் கொண்டிருந்தவர்கள் பலர்.

நன்னாரி வேர் இடப்பெற்ற பானைத் தண்ணீரைப் பருகவும், புதிதாகக் கொட்டிப் பரப்பப்பெற்ற புது ஆற்று மணலில் விரல்களால் கோலமிடவும் மட்டுமே சிறுவயதுப் பையனாகக் கம்பன் விழாவிற்குச் சென்றிருக்கினறேன். கொஞ்சம் புரிவது போலத் தோன்றிய பள்ளி, மழலைப் பருவத்திலும், ஆர்வத்துடன் கேட்கத் தோன்றிய கல்லூரி மாணவப் பருவத்திலும் நிகழ்ச்சிகள் சுவையாகத் தெரிந்தன. அந்த மேடைகளில் ஒரு காலத்தில் நானும நிற்பேன் என்றெல்லாம் நினைக்கக் கூடத் தெரியாத காலகட்டம அது. கம்பனைப் பற்றி நூலெழுதுவேன் என்று கனவு கூடக் கண்டதில்லை. 'கம்பரின் அறவியல் என்ற நூலெழுதிய பிறகு அதற்குப் பரிசும விருதும் கிடைக்குமென்று கூட எண்ணியதில்லை. அந்நூலின் அடிப்படையில் கம்பனில் புகுந்து இன்னும் நூல்கள் எழுதும் வாய்ப்புண்டாகும் என்று பகற்கனவு கூடக் கண்டதில்லை. ஆனால் இவையாவும் நடந்தேறியவை. இந்நூல் எழுந்தமைக்கான காரணம் இப்படித்தானமைந்தது.

கோயம்புத்தூரில் உள்ள தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தார் ஆர்ப்பாட்டம் ஏதுமின்றிச் சமூகப் பணிபுரிபவர்கள், 'மள்ளர் மலர்' என்ற தலைப்பில் ஏடொன்றையும் நடத்தி வருகின்றனர். ஓர் அறிவிப்பினை அவர்கள் வெளியிட அவர்களுக்கு எனது நூலான 'கம்பரின் அறிவியல்' அனுப்பப் பெற்றது. நூல் போய்ச் சேர்ந்த ஒரு திங்களில்

'கம்பராமாயணத்தில் மள்ளர்கள்' என்ற தலைப்பில் அறக்கட்டளைப் பொழிவாற்ற வருமாறு கேட்டு ஒரு மடல் வந்தது. அம்மடலால் இரட்டை மகிழ்ச்சி ஏற்பட்டது. மீண்டும் கம்பனுடன் கைகுலுக்க நேர்ந்தது முதல் மகிழ்வு. தமிழரின் இனமொன்றைக் காப்பியத்தின் வழியே கண்டுணர முடிந்ததில் இரண்டாவது மகிழ்வு. சேகரிக்கப் பெற்ற குறிப்புகள் மேடையில் பொழிவாகத் தரப்பெற்றன. மேடையிலேயே மன்றத்தலைவா முனைவர் குருசாமி சித்தர் 'இந்தப் பேச்சுரை எழுத்துரையாகும்' என அறிவித்த போது அரசு திடீரென ஒரு நல்ல பதவிக்கு என் பெயரைப் பரிந்துரை செய்ததைப் போல உளம் மகிழ்ந்தேன். உடனடியாகப் பணியைத் தொடக்குவது இல்லை என்ற மரபைப் பேணும் சராசரித் தமிழனாக நானிருந்ததால் குறிப்புகள் குறிப்புக்களாகவே வெகுகாலம் கிடந்தன. மள்ளர் மலரில் இரண்டு அல்லது மூன்று இதழ்களுக்கு வருமாறு ஒரு கட்டுரை வரையப் போதுமானவைகளாக அக்குறிப்புகள் தென்பட்டனவேயன்றி நூல் எழுதும் அளவு 'சரக்கு' சேகரிக்கப்பட்டிருக்கிறதா என்று ஓர் ஐயம் இருந்து கொண்டேயிருந்தது. மன்றப் பொறுப்பாளர்களில் ஒருவரும் பேராசிரியருமான முனைவர் தே. ஞானசேகரன என்னை எங்கே கண்டாலும் நினைவுபடுத்திக் கொண்டேயிருந்தார். "முதல்வாரம் தாங்கள எழுதித் தந்தால் மறுவாரம் நூல் தயார்" என ஆசைச் சொற்களையும் வழங்கினார். எதற்கும் நேரம் வரவேண்டாமா என்று பிறரைப் போலவே நானும் நாட்களைக் கடத்திக் கொண்டே வந்தேன். அறக்கட்டளைப் பொழிவின் அழைப்போலையைக் கண்ட சென்னைக் கம்பன் கழகச் செயலாளரும் பரிந்தென்னை வளர்ப்பதில் ஆர்வங்காட்டுபவருமாகிய அண்ணன் பழ. பழனியப்பர் பொழிவு, கருத்து, எழுத்துரை பற்றி அவ்வப்போது கேட்டுக் கொண்டேயிருந்தார். விளைவு : இவ்வாண்டு, (1999) கம்பன் விழாவில் அந்நூலை வெளிக் கொணர எடுக்கப்பெற்ற முடிவு. இது நூல் பிறந்த பின்புலம்.

மொழி, இனம், நாடு இவற்றில் தனித்த அக்கரை காட்டி வரும் டாக்டர் குருசாமி சித்தரை அறக்கட்டளைப் பொழிவின் போது சந்தித்தேன். பல சிந்தனைகளடங்கிய கலந்துரையாடலுக்குப் பிறகு அவரை வியப்பு மேலிடப் பார்த்தேன். மள்ளர்களாகிய உழவர்கள், வீரர்களைப் பற்றிய செய்திகளை விரல் நுனியில் வைத்திருந்த அவர் பேச்சுவாக்கில் கூறிய செய்தி கேட்டு என்னை நானே கிள்ளிப் பார்த்துக் கொண்டேன், அவர் கூறியது :

"மள்ளர் எனப்பெறும் உழவர்களாகிய எங்களைப் பள்ளர் எனப் பெயரிட்டு, தாழ்த்தப்பட்டோர் பட்டியலில் சேர்த்தது பிழையானது. ஊர் உலகுக்கே உணவளிக்கும் உழவர்களாகிய நாங்கள் எப்படித்

தாழ்ந்தவர்களாவோம்". மேட்டுக்குடியினர் என்று தம்மைக் கருதிக் கொள்ளும் மேல்தட்டு வர்க்கத்தாரில் பல சமூகத்தார் (அரசின் சலுகைக்களுக்காகத்) தம்மைப் பிற்படுத்தப்பட்டவர், மிகவும் பிறபடுத்தப்பட்டவர், தாழ்த்தப்பட்டோர் பிரிவுகளில் சேர்க்குமாற வேண்டுகோள் விடுக்கும் இந்தக் காலகட்டத்தில் இப்படி ஒரு கருத்தைச் சித்தர் ஐயா கூறியதும் மலைத்துப் போனேன். இன்னும் அந்த மலைப்பு நிலைத்துள்ளது. அண்மையில் அவசரம் அவசரமாக அவரிடம் தகவல் தந்துவிட்டு கையில் கிடைத்த ஒரு பக்கத் தாள்களில் எழுத்துரையை எழுதி அனுப்பிய போது கொஞ்சமும் கலங்காமல் "நேற்று நீங்கள் அனுப்பிய பகுதியைக் கணிப்பொறியிலிட்டு அச்சடித்தும் விட்டோம்; அடுத்தது எப்பொழுது வரும்? என அவர் வினவிய போது கூசிப்போனேன். 'எடுத்தது கண்டார்; இற்றது கேட்டார்' என்ற தொடரின் வேகம் புலனானது. தொலைபேசி வழியே வேகப்படுத்திய மற்றொருவர் முனைவர் ஞானசேகரன். நூலை அவர்களே வெளியிடுகின்றனர். இருவருக்கும் என் அகமார்ந்த நன்றிகளை வழஙகுவதில் மகிழ்கின்றேன்.

மேற்கோள் பகுதியினைப் படியெடும் அல்லல் எளியேனுக்கு ஏற்படாதவாறு மேற்கோள் செய்திகளைத் தனித் தனித்தாள்களில் எழுதித் தந்தும், ஆய்வுப் பணிக்கெனச் சந்திக்க வந்தபோது ஓரிரண்டு உதவிகள் செய்தும் நின்ற அன்பு உள்ளங்களுக்கு நன்றிகள் பல. சின்னச்சின்ன உதவிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு இந்த நூலுக்குத் தம்மாலானதைச செய்த அன்பர்கள் பலருண்டு. அனைவருக்கும் உள்ளத்தின் ஆழத்திலிருந்து நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

கம்பன் விழா மேடையில் சிறியேனின் நூலை வெளியிடக் காரணமான அண்ணன் பழ. பழனியப்பர் அவர்கட்கும் கம்பன் கழகப் பொறுப்பாளர்கள் அனைவருக்கும் நெஞ்சின் ஆழத்திலிருந்து நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

எழுத்துப் பிழைகள் தென்படின் தாங்களே திருத்திக் கொள்வீர்கள் என்பது என் நம்பிக்கை. கருததுப் பிழைகளாக ஏதும் தென்பட்டால் நூலாசிரியருக்கு எழுதித் தாங்கள ஆவன செய்ய வேண்டும் என்பது என் வேணடுகோள். தங்களின் மனந்திறந்த கருத்துக்கள் எளியேனை வளர்க்கும். இனி, மள்ளர் மாண்பினைக் காணக் கம்பன் தீட்டிய ஏர்க்களம் புகவும், போர்க்களம் புகவும் வேண்டுகிறேன்.

நன்றி வணக்கம்

புதுச்சேரி,
3.1.1999

பணிவுடன்,
அ. அறிவுநம்பி

## இயல் - 1

# இலக்கியமும் சமூகமும்

அமுது மிகவுயர்நதது; அதனையும் வெலலவல்ல ஆற்றலும் உயர்வும் கொண்டது அருந்தமிழ். இவ்வாறு எண்ணவும் போற்றவும் காலமெலாம் நினைந்து மகிழும் காரணமான தமிழ மொழியில் இலக்கியங்கள் தோன்றிக் கொண்டேயுள்ளன. "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்துக்கும்" முன்னது எனப் பாராட்டப்பெறும் தமிழ் மொழியில் உருவாக்கப் பெற்ற இலக்கியங்கள் பல்துறைச் செய்திகளை உள்ளடக்கங்களாகக் கொண்டு விளங்குகின்றன. தமிழிலக்கியங்களில் வரலாறு உண்டு; மொழி வளர்ச்சியுண்டு; பண்பாடு உண்டு; இட, மாந்தர் பெயர்கள் உண்டு; புராண, இதிகாசச் செய்திகள் உண்டு; வாழ்வியல் மரபுகள் உண்டு; அரசியல் உண்டு; இலக்கணம் உண்டு; இன்னும் ஒருபடி மேலேபோய்ச் சொல்வதென்றால் ஓர் இலக்கணம் மனிதவாழ்வின் அத்தனை நிலைகளையும் எடுத்துக் கூறுகின்றது எனலாம்.

காலந்தோறும் தமிழில் தோன்றிய நூல்கள் அதனாலேதான் பண்பாட்டுப் பெட்டகங்களெனப் போற்றப் பெறுகின்றன. தமிழர்களின் மத்தியில் காணப்பெற்ற வாழ்வியற் கூறுகளைப் படைப்பாளிகள் தத்தம் படைப்புகளில் இறக்குமதி செய்துள்ளனர். கற்பனைகளில் கூட அப்படைப்பாளர்களின் பட்டறிவே மிகுந்துள்ளது என்பர். எனவே இலக்கியம் ஒன்றை ஒருவன் கற்கும்போது பல்வேறு செய்திகளை ஒருசேரப் பெறமுடிகிறது. இலக்கியம் என்பது காலக்கண்ணாடி என்பது உணமை. தான் பிறந்த சூழலை இலக்கியம் தனக்குள் நேரடியாகவோ மறைமுகமாகவோ பொதிந்து வைத்துள்ளது. எனவே ஓர் இலக்கியத்தைப் பயின்றால் அதிலிருந்து பல்வேறு கூறுகளைப் படிப்பவன் உணரவியலுகின்றது. ஆழமாக அவ்விலக்கியங்களில் கருத்தைச் செலுத்தி, ஆய்வுப் போக்கில் சிந்தித்தால் மெய்ம்மைகளை உய்த்துணரவும் முடியும்.

இலக்கியங்களில் படப்பிடிப்பாகக் காட்டப்பெறும் நாட்டு, நகர வருணனைகள் மக்களின் உடை, நடை, பண்பாடு, மரபுகள், தொழில்கள், அக, புற வாழ்க்கைக் கூறுகள் யாவற்றையும் காட்டும். வேங்கையும் ஆடும் ஒரே நீர்த்துறையில் அருகருகே நின்று நீரருந்தும் என்பது போன்ற சொற்கள் நடந்ததைச் சொல்வதாக இல்லாதிருக்கலாம். ஆனால் மக்களும் பிற உயிரினங்களும் தத்தம் தேவைகளை அடைந்து மகிழும் வண்ணம் நகர் அல்லது நாடு தன்னிறைவு பெற்றதாயிருந்தது என்பதனைக் காட்ட இந்தச் சொற்களைவிட வேறு வலுவான, அழகான சொற்கள் தேவையில்லை.

எனவே இலக்கியம் கூறுகின்ற செய்திகளின் அடிக்கருத்தினைப் பெறுகின்றபோது அவ்விலக்கியம் மொழிகின்ற அனைத்தையும் உணரவியலும். இலக்கியங்களில் காணப்பெறும் இயற்கையிகந்த நிகழ்ச்சிகள் அறிவியலுக்குப் பொருந்தாததாயில்லாமல் இருக்கலாம். ஆனால் படைப்பாளன்தான் தான் கூறவந்த கருத்தினைப் பல்வேறு முறைகளில், கோணங்களில் கூறுவது பொதுமையானது என்ற கருத்தினடிப்படையில் இயற்கையிகந்த நிகழ்ச்சிகளையும் கணக்கிலெடுக்க வேண்டும். ஏனெனில் தமிழில் தோன்றிய அனைத்துக் காப்பியங்களிலும் இயற்கையிகநத நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. அவை பண்பாட்டை மொழிகின்றன எனக் கொள்ளுவது இலக்கியத்தை முறையாக நோக்குகின்றோம் என்பதனைக் காட்டும்.

எடுத்துக் காட்டாகச் சிலப்பதிகாரத்தில் கண்ணகி மதுரையை எரிக்கும் காட்சியை எடுத்துக் கொள்வோம். ஒன்றுமறியாத தன்கணவனை அறமற்ற முறையில் கொனற மதுரை மன்னனை வீழ்த்திய கண்ணகி தன் மார்பிலொன்றைப் பறித்தெடுத்து மதுரையில் வீசுகிறாள். மதுரை எரிந்து சாம்பலாகிறது. இஃது அறிவியலுக்குக் கொஞ்சங்கூடப் பொருந்திவராத செய்திதான்.

நடைமுறையில் இவ்வாறு நிகழச் சாத்தியமில்லை. ஆனாலும் கவிஞன் இவ்வாறு நிகழ்ச்சிகளை வடிவமைக்கக் காரணங்கள் பல இருக்கக்கூடும்.

1. தன் மணவாளனைக் கொன்ற மதுரை மீது கண்ணகிக்கு எழுந்த நெஞ்சக்கனல் மதுரையைச் சுட்டது.

2. "யானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டேன் அரவோடு ஒழிப்பேன் மதுரையையும்"

எனப் பேசியதால் பத்தினியே கண்ணகி என்பதனை மெய்ப்பிக்கவே இவ்வாறு நிகழ்ந்தது.

3. பத்தினியாயிருந்து 'சொல்லினால் சுடுவேன்' எனப் பேசிய சீதையைப் போலவே தன் பத்தினித் தன்மையைச் சுட்டெரிப்பால் சுட்டிக்காட்ட விழைந்தாள்.

4. உயர்ந்தோரேத்தும் பத்தினியாயின் நெருப்பை ஆக்கவும், பயனின்றிச் செய்யவும் இயலும். அனுமனின் வாலில் இலங்கையில் தீ வைக்கப்பட்டது. ஆனால் அஃது அவனைச் சுடவில்லை. நெருப்புக் கடவுளைச சீதை தன கட்டுப்பாட்டில் வைததிருந்தாள். அதுபோல

மதுரையை எரிக்க கொங்கைத்தீ எழுப்புகிறாள் கண்ணகி. இவற்றால் பத்தினித் தன்மை அல்லது பத்தினித் தனம் வெளிப்படுகின்றது.

இவ்வாறெல்லாம் ஒரு நிகழ்ச்சிக்குப் பல பொருத்தப்பாடுகளைக் கூறமுடியும். எனவே இலக்கியத்திலிடம் பெறும் யாவும் பொருள் பொதிந்து விளங்குதலை உணரலாம். அவ்வகையில் இலக்கியங்கள் விவரித்துக் கூறும் சமூகங்களைக் கண்டுணர்தலும் தேவையாகின்றது.

இலக்கியங்கள் புலப்படுத்தும் சமூகச் செய்திகள் மக்களின் அன்றாட வாழ்வியல் நடைமுறைகள் தொடங்கி ஓர் இனத்தின் பண்பாட்டு மரபுகள் வரை எல்லாவற்றையும் எடுத்து மொழிகின்றன. வடமொழிக் காப்பியத்தைத் தமிழாக்கம் செய்கின்ற கம்பர் தம் நிலம் சார்ந்த பண்பாட்டுக் கூறுகளையே முதன்மைப்படுத்தியுள்ளார் என்பதற்குப் பல சான்றுகளைக் கூறவியலும். வான்மீகரிலிருந்து கம்பர் விலகிநின்று பேசும் இடங்கள் இதனைத் தெளிவுப்படுத்தும்.

வாய்மொழி மரபுகளை இனங்கண்டு காக்கும் கம்பன் சில இடங்களில் தாலாட்டுக் குறியீடுகளையும், மண்டோதரியும் பிறரும் புலம்பும் இடம்போன்ற பல இடங்களில் ஒப்பாரியின் குறியீடுகளையும் இணைத்துத் தம் தமிழ் மரபைப் பேணுகின்றான். குறிப்பாகத் தமிழ் மக்களிடையே ஊடுகலந்து தமிழ் மக்களின் பழக்க வழக்கங்கள் பலவற்றைக் கண்டு உணர்ந்த 'கவிச்சக்கரவர்த்தி' அவற்றைப் படைப்பிலே உலவவிட்டிருக்கும் பாங்கு மனஙகொள்ளத் தக்கது. இருக்கையிலே அமர்ந்து கொண்டு கற்பனையுலகில் நடைபோட்டவனல்லன் கம்பன். அவன் தமிழ்ச் சமுதாயத்தில் உலவியவன். மக்களோடு ஒன்றியவன், அப்படி மக்களிடம் தொடங்கிய பாடலடிகளுக்கு அடுத்த அடிதெரியாமல் விழித்தான். பிறகு காத்திருந்து கவிதை வரிகளைக் காதுக்குள் வாங்கினான்.

மக்களிடம் பெருவழக்கான ஒப்பாரியைக் கம்பன் பதமாக, இதமாகத் தரும் பகுதி அவனது மக்கள் மரபை மதிக்கும் மாண்புக்கு ஒரு பதச்சோறு. கிராமத்திலே ஒப்பாரி என்பதை 'ஒப்பு' எனக் கூறி ஒப்புக்காக அழுவது எனற பொருளும் கூறுகின்றனர். அது பொருந்தாது. எந்த வீட்டிலே இழப்பு நேர்ந்துள்ளதோ அந்த இழவு வீட்டிலுள்ளவர்களுக்கு எவ்வளவு துயர் உண்டோ அதற்கு ஒப்பான துயரைப் பெற்று அழுவதே ஒபபரியானது. ஒப்புக்கு அழாமல் ஒப்பாக அழுதல வேண்டும். இறந்தவன் அடுத்தவனுக்கு ஐந்து காசு கூடத தந்திருக்க மாட்டான. அப்படிப்பட்ட ஆள் பிணமாகக் கிடக்கும்போது சுற்றியமாந்து ஒப்பாரி வைபபவர்கள் அவனைக் கொடை வள்ளல் என்றும் கர்ணனின் மறுபிறவி என்றும் உயர்த்திப் பாடுவார்கள். இனி அவன் திரும்பப் போவதில்லை. அவனுடைய

பாடையில் 'எச்சில்' விழக்கூடாது. உயர்வாகப் பேசவேண்டும் என்பது மரபு. இறந்து போனவனுக்கு 'ஒப்பார் இல்லை' எனப் புகழ்வது வழக்கம். இதுவே 'ஒப்பார் இல்' எனபபாடும் மரபே - 'ஒப்பாரி' என மருவிற்று என்பார் சிலர். கற்றறிந்த புலவர் ஒருவரிடம் கேட்டபோது அவர் சொன்னார் : "வரிப்பாடல்கள் என்றால் இசைப்பாடல்கள். கானல்வரி, வேட்டுவவரி என வருவதைக் காணலாம். இவ்வாறு வரும் வரிப்பாடல்களுக்கு ஓர் இசைக் கட்டுமானம் உண்டு. இறந்தவரைப் புகழ்ந்து வரிப்பாடல்கள் பாடுவர். ஒப்புமை சொல்லிப் பாடுவதனாலும், துக்கம் பெற்றாருக்கு ஒப்பாக நின்று பாடுவதனாலும், ஒப்பு + வரி என்பதே ஒப்பாரி ஆயிற்று".

எவ்வாறாயினும் சரி, இது தமிழர் தம் பண்பாடு. இப்பண்பாட்டைத் தம் காப்பியத்துள் காட்டிட நினைக்கிறான் கம்பன். தன பண்பாட்டை இலக்கிய வரிகளில் எடுத்து மொழியும் தமிழுள்ளத்தை இங்கே காணமுடிகிறது. இராமன், இலக்குவன் இருவருடனும் வனம் புகுகின்றாள் சீதை. காட்டிலே இருக்கும்போது ஒரு துயரச் செய்தி வந்து சேருகிறது. தயரதன் இறந்துபோன செய்தி கேட்டு மூவரும் கலங்கினர். தன் மாமனார் இறந்த செய்தி கேட்டு சீதை அழ வேண்டும். தமிழ் மரபின்படி ஒப்பாரி வைக்க வேணடும். ஒப்பாகவோ எவ்வாறாயினும் குறைந்தது மகளிர் இருவர் ஒப்பாரி வைத்தால்தான் மரபு வாழும். வனத்தில் சீதை ஒருத்தி மட்டுமே இருக்கிறாள். ஆடவர் அழுவது சிறப்பில்லை. பெண்டிர் ஆடவருடன் இணைந்து அழுவதுமில்லை. அழாமலிருந்தால் மாமனார் இறப்புக்கு மனம் வருநதாத மருமகளாகி விடுவாள் அவள். அழவும் முடியாமல், அழாமலி ருக்கவும் முடியாமல் சீதை தவிக்கிறாள். அவளை விட அதிகம் துடிக்கிறான் கம்பன். மரபு காக்கப்பட வேண்டுமென்ற தீவிரம் மிகுகிறது. தமிழ் நெஞ்சினனான கம்பன் பாடுகிறான்

துண்ணெனும் நெஞ்சினாள் துளங்கினாள் துணைக்
கண்ணெனும் கடல்நெடும் கலுழி கான்றிட
மண்ணெனும் செவிலிமேல் வைத்த கையினாள்
பண் எனும் கிளவியால் பன்னி ஏங்கினாள்

இந்தப் பாடலில் அப்படி எனனதான் சிறப்பு எனக்கேட்கலாம். 'இருந்த மாநிலம செல்லரித்திடவும் ஆண்டு எழாதாள்' ஆகச் சுந்தர காண்டத்தில் சீதையின் - அ(ச்)சோக வனத்துச் சீதையின் - அவலத்தை விரிவாகப் படந்திட்டும் கம்பனின் கரங்கள். இப்பாடலில் இக்கரங்களின் வித்தகம் பளீரிடுகின்றது. அழுகின்ற காட்சியை விளக்கும் கம்பநாடன் தன்னுடைய கரங்களை மண்மீது வைத்துக் கொண்டு அழுகின்றாள் என்கிறான். அழும்போது அவளிருநத கோலம் இது. அதிலென்ன புதுமை? கம்பனின் புனைவுச் சிறப்பு இங்குதான் உளளது. வெறுமனே மண் எனக் கூறாமல்

மண்ணாகிய செவிலியின மீது கைவைத்துக் கொண்டு அழுகின்றாள் எனக் கூறுகிறான். இப்போது பாருங்கள் அழுவது இரண்டு நங்கைகள். ஒருத்தி சனகனின் மகள்; மற்றவள நிலமென்னும் நல்லாள. அப்பாடா! மரபு பிழைத்தது; மங்கை சீதையும் பிழைத்தாள். உருவகித்துப் பாடிய இப்பாட்டில் ஒரே கல்லால் இரண்டு கனிகளை வீழ்த்துகிறான் கம்பன். தமிழ் மரபுப்படி மகளிர் இருவர் ஒப்பாரி வைத்தனர் என்பது முதலாவது. இரணடாவது மண்மகளே அழக்கூடிய அளவு தயரதனின் இறப்பு அமைந்தது என்பது. இழவுக் காரியத்திலேயே இவ்வளவு நுணுக்கமாகத் தமிழ்ப் பண்பாட்டைக் கம்பனின் தமிழ் உள்ளம் காட்டுமானால் மன்றல் நிகழ்ச்சியில் எவ்வளவு அழுத்தம் இருக்கவேண்டும். அதையும் காணுவது தேவையானது.

ஈருடல் ஒருயிராய் களவு வாழ்க்கையிலிருந்து கற்பு வாழ்வுக்கு வருதலே தமிழர்தம் பழமரபு. எனவே கற்பு வாழ்க்கைக்கு முன் நங்கையும் நம்பியும் ஒருவரை ஒருவர் கண்டு, காதல் வயப்பட்டு, மனங்கலந்து நிற்கவேண்டுவது முறைமை. சிவனின் தனுசினை ஒடிக்கும் முன்னதாக, மன்றலுக்குரிய சீதையைக் காணுவதென்பது எம்மன்னனுக்கும் வாய்க்கவியலாதது. மிதிலை வரும் இராமன் சீதையை மணக்கும் முன்பாகவே இருவர்தம் உள்ளங்களும் ஒன்றுகின்ற தமிழ் மரபை நிலைநாட்ட எண்ணிய கம்பன் சனகன் மகள் கையில் மலர்ப் பந்து தருகின்றான். உப்பரிகையில் ஆடிக்கொண்டிருந்த சீதையையும், வீதியிலே மாமுனியுடன் வந்து கொண்டிருந்த இராகவனையும் சந்திக்க வைத்துச் சித்தாடுகிறான் புலவர் பெருமான். தமிழ் மரபை, பண்பாட்டை விழையும் கம்பனின் நோக்கு நமக்குத் தெரிகிறது. கம்பன் காட்டும் நோக்கு பற்றிப் பார்க்கலாம்.

எண்ணஅரு நலத்தினாள் இனையள் நின்றுழி
கண்ணொடு கண்இணைகவ்வி, ஒன்றைஒன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்

இதயம் மாறி இருவரும் உளங் கலந்ததாகக் கம்பன் காட்டும் இப்பாடல் இல்லாவிடினும் கூட, இப்பகுதி அமையாவிடினும் கூடக் காப்பியக் கட்டுக்கோப்பிற்கு ஒரு குறையுமில்லை. வடமொழி மரபுகளிலிருந்து மாறுபட்டு, தலைவனும் தலைவியும் களவுக்குப் பிறகு கறபு வாழ்வு மேற்கொண்டு தமிழ் மரபினராக உருமாற்றம் பெற்றிருப்பதை எண்ணுங்கால் படைப்பாளியின் மனம் புலனாகும்.

இவ்வாறு காபபியப் புலவர் தம் இனத்தின் நாகரிகங்களை, பழக்க

வழக்கங்களை, மரபுகளை வரைந்து மகிழ்கின்றமை எல்லா மொழியிலும் காணப்பெறுகின்ற ஒன்று. "வான்மீகத்தில் இராவணன் கொடி, மனிதத் தலையின் உருவம் பொறித்தாகக் கூறப்பட்டுள்ளது. கம்பராமாயணத்தில் இது வீணைக் கொடியாக மாற்றப்படுகின்றது. இராவணனின் இசைக் கலையை விளக்குவதற்குக் கம்பர் இவ்வாறு மாற்றுகின்றார் எனலாம்"[2]

ஒரு சின்னக் கொடியின் படம் கூட மிகக் கவனத்துடன் கம்பரால் கருதப்பெறுவதை இவண் கவனித்தல் தகும். வான்மீகி கூறாத இரணியன் கதையைக் கம்பர் மிக விரிவாக - ஒரு தனிப் படலமே பாடி வரைந்தமைக்குக் காரணமுண்டு. ஆழ்வாாகளிடம் தனிப்பற்றுக் கொண்டவன் கம்பன். அதனால் வடமொழி இராமாயணம் கூறாத, ஆழ்வார்கள் கூறியருளிய பிரகலாதன் கதைக கூற்றை எடுத்துப் பேசுகின்றான். ஆழ்வார்களின் சொல்லாடல்களும், பிறவும் இவ்வாறு கம்பனால் எடுத்தாளப் பெற்றமையைப் பலரும் சுட்டியுள்ளனர்.

அதனையொப்பவே, நாயன்மார்கள் - குறிப்பாகச் சமயக்குரவர் நால்வர் - பரம்பொருளான கயிலாயத்தானை ஏத்தும் போதெல்லாம் இராவணனை நினைவு கூர்வதையும் கவனித்த கம்பன் தன் பங்களிப்பாகச் சிலவற்றை மேற்கொளகின்றான். 'பதிகம்' என்ற பெயரில் அமையும் பத்துப் பாடல்களுடன் பதினொன்றாம் பாடலாக வரும் பாடலையும் நோக்கும் போது இராவணன் கயிலை மலையை எடுத்த நிகழ்வே மிகுதியும் பேசப்பெறுவது புலனாகும். எனவே இராணவனின் இசையறிவையுணர்ந்த கம்பன் அதனைக கொடியிலேற்றிப் பறக்கவிடுகிறான் எனக் கருதுவது பொருத்தமானதாகிறது. இதைப் போலக் கவிஞன் தான் வாழும் மண்வாசனையைத் தம்படைப்பில் இழைய விடுவது மரபு. தேம்பாவணியை உருவாக்கும் போது தமிழ் நிலத்தையே வீரமாமுனிவர் கருதினாரென்பர். அதைவிடவும் உமறுப்புலவர் சீராப்புராணம் யாக்கும் போது பாடலில் வரையப் பெற்றவை தமிழ் நிலங்களே என்ற கருத்து வலுவானது. இதனைப் 'படைத்தல் நெறி' என்று குறிப்பர்.

"படைத்தல்" என்பது முதனூலிற் காணப்பெறாத நிகழ்ச்சிகளையும், கூற்றுக்களையும் புதுவதாகக் கவிஞன் படைத்துக் கொள்வதைக் குறிக்கும். கம்பர், தாம் வகுத்துக் கொண்ட காப்பிய அமைப்புக்கிணங்கப் புதியன புகுத்தலாகப் புதுமைகள் சிலவற்றைப் படைத்துக் கொள்கின்றார்"[3]. இதற்கான சான்றுகளாகப் பல்வேறு அகச்சான்றுகளையே தரவியலும். மண்வாசயைிற் பிறந்தவைகளாக இவறறைக் கருதவேண்டும்.

இராமனும் சீதையும் ஒருவரையொருவர் காதலித்து மணந்ததாகப் படைத்திருப்பது கம்பருடைய படைப்பே ஆகும். கம்பர் தமிழ் மரபையொட்டி இராமன் சீதை திருமண வாழ்க்கையில் களவு மணத்தைப்

படைக்கின்றார். (கம்ப, I : 10 : 35 - 38). கைகிளைப் படலம் அமைகின்றார் (கம்ப, II : 11 : 2 - 10). "நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு" (கம்ப, 2 : 4 : 221) எனச சீதை தமிழ் மரபையொட்டிப் பேசுமாறு படைக்கின்றார். படைத்தல் நெறியை மேற்கொண்டு, கம்பர் படைத்துக் கொண்டுள்ள புதுமைகளை எண்ணும் பொழுது கதைத் தலைவனும் இராமனின் புனிதத் தன்மையைக் கருத்தில் கொணடு புதுமையாகப் படைத்துக் கொணட நிகழ்ச்சிகள, தமிழ் இலக்கிய மரபுகளுக்கேற்பத் தன் காப்பியம் அமைதல் வேண்டுமெனறு கருதிப் படைத்துக் கொண்டவை, காப்பியக் கட்டமைப்பு நிலையை விளக்கம் முறையில் படைத்துக் கொண்டவை என மூவகையாகப் பகுத்துக் கூறலாம்"[4].

மேற்கூறப்பெற்ற கருத்துக்கள் யாவும் புலப்படுத்தும் செய்திகள் இரண்டு.

1. படைப்பாளன் தன் படைப்பில் தான் வாழும் நிலத்தை, மக்களை, நிலவியல் சூழலை விவரித்தாக வேண்டும். வேற்று மாநிலக் கதை அல்லது வேறு நாட்டினைச் சார்ந்த கதை எதுவாக இருந்தாலும் வாய்ப்பு நேருங்கால் தம் புறச்சூழலை, இனமரபை, பழக்க வழக்கங்களைப் பொழிவது என்பது தொன்று தொட்டு வரும் மரபு.

2. இயற்கையிகந்த நிகழ்ச்சி போன்றவற்றில் கூடப் படைப்பாளன் தான் சார்ந்துள்ள நிலம் காட்டும் பொருண்மைகளையே மறைமுகமாகப் பதிய வைக்கின்றான். அந்த வகையில் கம்பனை உணர விழைகுவார்க்கு இராமாயணம் கூறும் வருணனைகள், இயற்கைக்கு மாறான புனைவுகள், இன்ன பிறவற்றில் மறைந்து நிற்கும் தமிழ் நிலக் கூறுகள் உதவும். அயோத்தி நகர வண்ணனையில் கமபனின் கற்பனை வளம் குறைவு என்றும் தமிழ்நில வண்ணனையே மிகுதி என்றும் கொள்வதில் பிழையில்லை.

"கம்பருடைய கதையில் வரும் கோசலமும் மக்களும் நீர்வளமும் நிலவளமும் தமிழ் நாட்டனவேயாகும். காப்பியத்தில் இடம் பெறுகின்ற செய்திகள் யாவும் தமிழ் நாட்டுச் செய்திகளே ஆகும். தாம் வாழ்ந்த தமிழ் நாட்டில் கண்ட பழக்க வழக்கங்களையும், பண்பாட்டு நெறிகளையும், இலக்கிய மரபுகளையும் கமபர் அடியொற்றிப் பாடியிருப்பதால், அவருடைய காப்பியம் ஒப்பற்ற வழி நூலாக அமைகின்றது. வழிநூல் இயற்றுபவர் எவ்வெவ்வாறு நூலியறற வேண்டும் என்பதற்கு இஃது ஓர் அரிய இலக்கியமாக இலங்குகின்றது"[5].

கூடுதலாக மற்றுமோர் எடுத்துககாட்டும் வருமாறு :

வரைக் காட்சிப் படலம் முற்றிலும் தமிழ் மரபை ஒட்டி

அமைக்கப்பட்டுள்ளது. அது குறிஞ்சித் திணைக்குரிய கருப் பொருள்களைக் கொண்டு பாடப்படுகின்றது. குறிஞ்சியின் உரிப் பொருளான புணர்தலும், புணர்தல் நிமித்தமும் இங்குப் பேசப்படுகினறன. இப்படலப் பாடல்களில் முதற் பொருளான பூக்கொய்து விளையாடுதல் சங்கப் பாடல்களில் இடம் பெற்றிருப்பதை ஒட்டி இங்கு இப்படலத்தைக் கம்பர் பாடுகின்றார். புனல் விளையாட்டு, பரிபாடல் போன்ற சங்க நூல்களிலும், சிந்தாமணி, பெருங்கதை போன்ற தமிழ்க் காப்பியங்களிலும் பாடப் பெறுகினறது. அதனை யொட்டிக் கம்பர் இதனைப் பாடினாராதல் வேண்டும். உண்டாட்டுப் படலச் செய்திகள் தமிழ் அகப்பொருள் மரபை யொட்டிய ஊடல் கூடல், புலவி பற்றிய நுணுக்கங்களாக அமைகின்றது"[6].

"கம்பர்" முத்தமிழ்த் துறையின் துறைபோகிய உத்தமக் கவிஞர். குழுவை நோக்கித் தம் காப்பியத்தைப் புனைந்திருப்பதால் தமிழ் மரபுகளுக்குக்கேற்றவாறு அகப்பொருள் புறப்பொருள் மரபுகளைத் தம் நூலில் புனைகின்றார். சான்றோர்க் கவியைக் கோதாவரி ஆற்றுடன் ஒப்பிட்டுப் பேசும் பொழுது "அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவி"ச் (கம்ப, III : 5 : 1) செல்லும் தமிழ்ப் பாக்களைக் கம்பர் நினைவு கூர்கின்றார். நானிலத்தையும் ஒரே பாடலில், சரயு நதியின் மூலம் இணைக்கின்றார்.

முல்லையைக் குறிஞ்சி ஆக்கி மருதத்தை முல்லையாக்கிப்
புல்லிய நெய்தல் தன்னைப் பொருவரு மருதமாக்கி
எல்லையில் பொருள்கள் எல்லாம் இடைதருமாறுநீரால்
செல்லுறு கதியில் செல்லும் வினையென, சென்றது அன்றே

(கம்ப I : 1 : 17)

வரைக் காட்சிப் படலத்திலும் சித்திரக்கூடப் படலத்திலும் குறிஞ்சி நிலத்தைக் காட்டுகின்றார். கோசலநாடு மருதநில நாடாக அமைகின்றது. நெய்தல் நிலமான கடற்பரப்பைக் கடல்காண் படலத்தில் புனைகின்றார். (கம்ப. IV : 1). பாலையின் வெம்மையைத் தாடகை வதைப் படலத்தில் வருணிக்கின்றார் (கம்ப. I : 7 : 5 - 16).

இந்நிலை அமைப்புகளையொட்டி எழுகின்ற அகத்திணைகளைக் கம்பர் முறையாகப் பாடும் போக்கை மேற்கொண்டார் அல்லர். காப்பிய அமைப்பில் அதற்கு இடமில்லை எனலாம். எனினும், அன்பின் ஐந்திணையின் விளக்கமாக இராமன் - சீதை காதல் பொலிகின்றது. வரைக் காட்சிப் படலம், பூக்கொய் படலம், நீர் விளையாட்டுப் படலம், உண்டாட்டுப் படலம் போன்ற பகுதிகளில் ஊடற் காட்சிகளை இடை இடையே அமைக்கின்றனர். கைக்கிளைத் திணையை இராமன் சீதையை

நினைந்து உருகும் போக்கில் தனிப் படலமாகப் புனைந்து கொள்கின்றார் (கம்ப. I : 11). "காமஞ்சாலா இளமையோள் வயின் ஏமஞ்சாலா இடும்பை எயதித் ... தோன்றும்" தொல்காப்பியக் கருத்தின் வளர்ச்சியாக இப்படலம் அமைவது நினைக்கத்தக்கது. "சூர்ப்பணகை இராமன் மாட்டுக் கொள்வது காதலன்று, காமமே" என்பதைக் குறிப்பாக உணர்த்தி அதனைக் கடிந்து ஒதுக்குகிறார் கம்பர். இராவணன் சீதையிடம் கொண்ட காதலைப் பெருந்திணைக் காதலாகக் காட்டலாம்; அயோமுகி இலக்குவன் மேல் கொள்ளும் காதலும் (கம்ப III : 14 ; 51-58) பெருந்திணையாக அமைகின்றது"[7].

காப்பியக் கதையை ஆறு, நகர, நாடு வருணனைகள் எவ்வகையில் விளக்குகின்றன என்று காண்போம். காப்பியத் தலைவனை நமக்கு அறிமுகம் செய்யும் முன்பு, அத்தலைவன் தோன்றிய நாட்டையும் நகரத்தையும் விளக்கும் தமிழ்க் காப்பிய மரபு சிந்தாமணியிலிருந்து தொடங்குகின்றது. மேகம் விண்ணில் திரண்டு மழை பொழிவதிலிருந்து தொடங்கி, வெள்ளம் பெருக்கெடுத்தோடுவதைக் காட்டி, அவ்வெள்ளத்தின் போக்கைப் பின்பற்றி அந்நாட்டின் உழவுத் தொழிலைக் கண்டுவிட்டு நகருக்குள் புகுந்து மன்னனைக் காணகின்றோம். வெள்ளம் பெருக்கெடுத்தோடுதல், உழவர் அதனைத் தேக்குதல், உழுதல், நடுதல், களைகட்டல், அறுத்தல், வண்டியில் ஏற்றிச் செல்லுதல் என எதனையும் விடாது வரன்முறையாகத் திருத்தக்கதேவர் பாடுகின்றார். (சீவகசிந்தாமணி, நாமகள் இலம்பகம்) சூளாமணியும் இப்போக்கைப் பின்பற்றகின்றது.

"கம்பர் திருத்தக்க தேவரைப் பின்பற்றி, அவர் கூறியிருப்பதை விரித்து, ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம் என விரிவாகப் புனைநதாரேனும், தேவரைப் போன்று ஒன்றையும் விடாமல் பாடினார் அல்லர். அவர் காணுகின்ற காட்சியே வேறு. மழையிலும், ஆற்று வெள்ளத்திலும் காப்பியக் கதையைக் காண்கின்றார் கம்பர். கோசலம் புனை ஆற்றின் வெள்ளத்திற்கு மாதரார் கற்பே காரணமாகினறது (கம்பராமாயணம், I; 1:1); கற்பின் திறத்தை விளக்கும் காப்பியத்தைக் கற்பைச் சிறப்பித்துத் தொடங்கியிருப்பது குறிப்பிடததக்கது".[8]

இதுகாறும் கூறியவற்றால் கம்பனின் காபபியததில் வரும் நிலம் சார்ந்த வருணனைகள், ஆறு சார்ந்த வருணனைகள், மலை, கடல் போன்ற பிற இயற்கை சார்ந்த வருணனைகள யாவும தமிழகத்தை அடிப்படையாகக் கொண்டவை எனத் தெளியலாம. இந்நிலத்தைச் சார்நத மக்கள் சமூகத்தையே தம் காப்பியமெங்கும உலவவிட்டிருககிறான் கம்பன் எனவும் தேறலாம். இந்தப் பின்னணியில் கம்பன் காபபியததில பலவேறு

சமூக இனங்களைக் காணலாம். குறிப்பாகக் குரங்கினம், அரக்கரினம் ஆளும் எல்லைகளைத் தவிர்த்த, மனித இனம் பற்றிய இடங்களில் தமிழரை, தமிழ்ச் சமூகத்தை முன்நிறுத்தியே கம்பன் பேசுகிறான் எனக் கருதுதல் தகுவது. கம்பன் சுட்டும் பல்வேறு இனத்தாருள் 'மள்ளர்' என்ற இனமும் அடங்கும். மள்ளரினம் கம்பரால் எங்ஙனம் எடுத்து மொழியப் பெறுகின்றது எனக் காணுதல் இந்நூலின் குறிக்கோளாகக் கொள்ளப்பெறுகின்றது.

## சான்றென் விளக்கம்

1. அ. அறிவுநம்பி, "தமிழ் உள்ளம்", கம்பன் திருவுள்ளம், ப. 76 - 80
2. அ. பாண்டுரங்கன், காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.180,
3. மேலது, ப.74
4. மேலது, ப. 76, 77.
5. மேலது, ப. 81.
6. மேலது, ப.197.
7. மேலது, ப. 198-199
8. மேலது ப. 185-186

இயல் - 2

# மள்ளர் குலம் - ஓர் அறிமுகம்

*மள்ளர் எனப்படுவோர் தமிழ்ச் சமூகத்தில் ஓர் இனத்தார். பண்டைய நூல்களில் மள்ளர் என்ற சொல் இடம் பெறுவதைக் கொண்டு இந்தச் சொல்லின் பழமையை உணரவியலும். இச்சொல்லிற்குப் பலரும் பல பொருள்களைக் கூறிவருகின்றனர். இலக்கியங்களில் காணப்பெறும் இச்சொல் எதனை அல்லது யாரை உணர்த்துகினறது எனக் காண்பதும், தமிழகத்தில் கிடைக்கப்பெறும் அகராதிகள் இச்சொல்லிற்கு எடுத்துரைக்கும் விளக்கங்கள் எவையெனக் காண்பதும் தேவையாகின்றன. இச்சொல்லிற்கு நிகரான தமிழ்ச் சொற்களையும் கணக்கிலெடுக்க வேண்டும். அப்போதுதான் ஒரு பொருள் குறித்த பல சொற்களை அறிய இயலும். வெவ்வேறு சொற்கள் எவ்வெவ்வாறு பயனளிக்கின்றன என்பதும் கருதத்தக்கது. எனவே இச்சொல்லிற்குரிய விளக்கங்களை அறிதற்கு அகராதிகள், பெருஞ் சொல்லகராதிகள ஆகியவற்றை நோக்குதல் தேவையாகின்றது. அவை உணர்த்தும் விளக்கங்கள் அப்படியே தரப்பெறுகின்றன.*

மள்ளர்-

1. உழவர் (சூ. நிக. உ : எக.)
2. குறிஞ்சி நில மாக்கள் (சூ.நிக.உ; சாசா)
3. திண்ணியர் (சூ. நிக. உ : ரு)
4. மருத நில மாக்கள் (சூ.நிக.உ; எக)
5. மறவர்
6. வீரர் (5,6 - சூ.நிக.கக : ளகரவெ.க)

மள்ளம் - வலி, (பிங்கல நிகண்டு - கஎசாக)
மள்ளன் - இளையோன் (பரிபாடல்)
மள்ளு - மல்லு, கைமரம் (வழக்.)

*கதரை வேற்பிள்ளையின் தமிழ் - தமிழ் அகராதி (மூன்றாம் தொகுதி, பக்க எண் 1634) காட்டும் விளக்கம் இது. 'மள்' என்பது அடிச்சொல்லாக, வேர்ச்சொல்லாக அமையும். அதற்கு வலிமை என்பதே பொருள். வீரர், மறவர் எனற விளக்கம் அதனடியின பிறந்ததே. எஞ்சிய விளக்கங்கள் கூர்ந்து கவனித்தலுக்குரியவை. முதனமைபபடுத்தப் பெற்ற விளக்கமாக 'உழவர்' என்பதே கூறப்பெறுகினறது. பிறகு அததொழிலில் ஈடுபாடு காட்டுபவர்களாகிய குறிஞ்சி, மருத நில மக்கள் குறிக்கப*

பெறுகின்றனர்.' இச்செய்திகளான உணரப் பெறும் கருத்துகள் வருமாறு : மள்ளர் எனப்படுவோர் பெரும்பான்மை உழவர்கள், அவர்கள் குறிஞ்சி, மருத நிலஞ்சார்ந்தோர், வீரர்களாகவும் விளங்கியுள்ளனர். ஏறத்தாழ அனைத்து அகராதிகளும் இச்சுவட்டிலேயே விளக்கந்த தருகின்றன.

## தமிழ்ப் பெருஞ் சொல்லகராதி கூறுவது :

*மள்ளம்* mallam, n. See *மள்ளல் (பிங்.)*

*மள்ளல்* mallal, n. Perh. malla. Strength, Power, robustness; *வலிமை (திவா.)*

*மள்ளன்* mallan, n. Perh. id.

1. Strong, Powerful Person; *திணணியோன் (பிங்.)*
2. Warrior; *படைவீரன் களம்புகு மள்ளர் (கலித். 106)*
3. Commander, Military chief; *படைத்தலைவன் (சூடா.)*
   Youth; *இளைஞன் பொருவிறல் மள்ள (திருமுரு. 262)*
5. Inhabitant of agricultural tracts; *மருத நிலத்தில் வாழ்வோன் (திவா.) மள்ளருழுபக டுரப்புவார் (கம்பரா. நாட். 18)*
6. Jinhabitant at hilly tracts; *குறிஞ்சி நிலத்தில் வாழ்வோன் (சூடா)*

'லெகசிகன்' எனப்பெறும் தமிழ்ப் பெருஞ் சொல்லகராதி விளக்கம் தரும் போதும் மள்ளர் என்போர் உழவர், படைவீரர், மருத, குறிஞ்சி நிலத்தோர் என்றே விளக்கக் காண்கிறோம். உழவுத் தொழிலில் ஈடுபடுவாரே உலகிற்கு ஆணி என்ற வள்ளுவம் இங்கே கருதத்தக்கது. கூடுதலாக எந்த இலக்கியங்களில் இச்சொல் இடம் பெற்றுள்ளது என்பதை மிகச்சில எடுத்துக் காட்டுகளால் இவ்வகராதி சுட்டுகிறது. இறைவனுக்கும், இளைஞனுக்கும் இச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளமையையும் மேற்குறித்த இலக்கியச் சான்றுகள் சுட்டுகின்றன.

தமிழ் - தமிழ் அகர முதலி (தொ. ஆ. மு. சண்முகம்பிள்ளை) தரும் கருத்துக்கள் வருமாறு :

| | | |
|---|---|---|
| மள்ளம் (ல்) | - | வலிமை |
| மள்ளன் | - | உழவன்; திண்ணியோன்; வலிமையுடையவன்; படைத்தலைவன்; படைவீரன்; இளைஞன்; மருதநிலத்தோன்; குறிஞ்சி நிலத்து வாழ்வோன். (ப. 859) |

மள்ளர் என்ற சொல்லிற்குரிய விளக்கத்தை பக்கம் 1198 இல்

மூன்றாம் தொகுதியில் காணலாம்.
பழந்தமிழ் நூற் சொல்லடைவின்

1. நற். 260 - 3;
2. குறு. 31-1, 34-5, 364-8;
3 ஐங். 94-1, 371-1, 400-1, 432-3;
4. பதி. 13-21, 38-10, 66-14, 81-34, 90-44
5. கலி. 106-10;
6. அகம். 21-13, 144-14, 316-7
7. புறம். 10-9, 77-9, 78-7, 79-5, 84-5, 89-6.

| | | |
|---|---|---|
| மள்ளன் | - | ஐங். 383-4<br>புறம் 251-3 |
| மள்ளர் மள்ளற | - | பெரும். 455 |
| மள்ளர் மள்ளன் | - | புறம். 399-20 |

மேற்குறித்த பாடல் குறிப்புகளுடன் கூடுதலாகத் தெனபடும் 'மள்ளர்' குறித்த குறிப்புகள் குருசாமி சித்தரின் 'தொல்காப்பியமும் மருத நில மள்ளரும்' (மள்ளர் மலர் : ஜுன் 1995, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்க முதல் தொகுதி 1995, பக். 346 - 347) எனும் கட்டுரையின் வழி விரிவாக அறியப் பெறும். அவை வருமாறு :

| | | |
|---|---|---|
| கவிகை மள்ளன் கைபட்டோரே<br>(கவிகை - குடை) | - | புறம் 81 வரி 5 |
| கலிகொள் மள்ளர் வில் விசையின் உடைய | - | அகம் 185-7 |
| விழுவுப் படர் மள்ளரின் முழுவு<br>எடுத்து உயரி | - | அகம் 189-5 |
| களம்கொள் மள்ளரின் முழங்கும் அத்தம் | - | அகம் 227-11 |
| இனம் தோ உழவர் இன் குரல் இயம்ப | - | அகம் 314-4 |
| கொண்டி மள்ளர் கொல் களிறு பெறுக | - | பதிற்றுப்பத்து 43-25 |
| தார் புரிந்தன்ன வாளுடை விழவின் போர்<br>படு மள்ளர் போந்தொடு தொடுத்த | - | பதிற்றுப்பத்து 63-13 |
| மள்ளர்கள் மறுபடை மான யானை மேல்<br>வெள்ளிவேல் எறிவன போன்ற மேகங்கள் | - | கம்பராமாயணம் 4164 |

*இருங்கழன் மள்ளர் பதம்படர் திருந்தடி* - *ஞானாமிர்தம் அகவல் 276-7*

*வாய்பொழி குவளைகள் சூடி மள்ளர்கள்* - *சீவகசிந்தாமணி 55*

*மாரியிற் கடுங்கணை சொரிந்து மள்ளர்*
*ஆர்த்தபின்* - *சீவகசிந்தாமணி 277*

*கொன்றவன் வேழம வீழ்ப்ப மற்றுமோர்*
*களிற்றிற் பாய்ந்து நின்ற மாமள்ளர் கெல்லா*
*நீணமுடி யிலக்க மானான்* - *சீவக்சிந்தாமணி 286*

*சூழ்கழன் மள்ளர் பாறச் சூழ்ச்சியிற்*
*றந்தை புல்லி* - *சீவகசிந்தாமணி 1138*

*ஒண்கொடி யுருவத் திணடே ரொளி மயிர் புரவி*
*பண்ணணி வன்கழலணிந்து மள்ளர் வாள் வலம்*
*பிடித்து நாளை* - *சீவகசிந்தாமணி 2151*

*கொட்டினர் முரச மள்ளர் ஆர்த்தனர்*
*குருதிக் கண்ணீர்* - *சீவகசிந்தாமணி 2323*

*அம்புகை வல்வில்லார் கழன்மள்ளர்*
*திறலேத்த* - *சீவகசிந்தாமணி 2332*

*படுமழைத் துளியிற் பாய்மாப் பரந்தன நிரந்த*
*பொற்றேர் இடைநில மின்றி வேலுமீண்டின*
*மள்ளர் தொக்கார்* - *சீவகசிந்தாமணி 2525*

*மட்டுயரலங்கல் சூடி மறங்கிளர் மள்ளர் சூழ்ந்தார்"*
*சூளாமணி 842*

*அகராதிப் பொருள்களுடன் கூட நிகண்டுகள் எடுத்துரைக்கும் விளக்கங்களையும் காணுவது நல்லது.*

"அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வரும் தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்"

*என்பது திவாகர நிகண்டு. அதனைப் போன்றே,*

"செருமலை வீரரும் திண்ணியோரும்
மருதநில மக்களும் மள்ளர் என்ப"

*எனறு பிங்கல நிகண்டு பேசக் காணலாம். இதனால் மள்ளர் என்ற சொல்லிற்குப் போர்வீரர், உழவர், திண்ணியர் போன்ற விளக்கங்கள் கிடைக்கின்றன.*

**மள்ளர், மல்லர் சொல்லாட்சிகள் :**

பண்டைய தமிழிலக்கியங்களில் மள்ளர், மல்லர் ஆகிய இரு சொற்களும் பயின்று வருகின்றன. இரண்டும் ஒரே பொருளையே விளக்குகின்றன. மிகத துல்லியமான வேறுபாடுகள் மிகுதியும் தென்படவில்லை. தமிழ்ப் பேரகராதி (ப. 3097) கீழ்க்கண்டவாறு விளக்கம் தரும்.

மல் - வளம், வலிமை

மல்லல் - வலி

இதே பேரகராதி (ப. 3116) தரும் பிறிதொரு விளக்கம் வருமாறு :

மள்ளல் - வலிமை

மள்ளன் - படைவீரன்

கதிரைவேற் பிள்ளையின் அகராதியும் மல்லம், மள்ளம் இரண்டிற்கும் வலி என்றே பொருள் புகலும். எனவே மள்ளர் என்பதற்கு அவ்வகராதி உழவர், திண்ணியர், மறவர், வீரர் என்று விளக்கந்தரும். உழவர்க்குரிய பிறிதொரு சொல் மழவர் என்பது. புறப்பாடல் (90) மற்றும் சிலப்பதிகாரத்தில் மழவரோதை என வருமிடம் இங்கே கருதத்தக்கது. எனவே கீழ்க்காணும் மூன்று சொற்களைப் பண்டைய தமிழிலக்கியங்களில் இருந்து பட்டியலிடலாம்.

1. மள்ளர்
2. மல்லர்
3. மழவர்

பவளம், பவழம் என ள, ழ இரண்டும் சொல்லிடை வரும். மள்ளர் என்ற சொல் வீரர், உழவர் என இரு பொருள் சுட்டும். இடத்திற்கேற்ப அதன் நுண்பொருள் காணுதல் தேவை. (வீட்டுக்காரர் என்பது ஒரு தமிழ்ச் சொல் "எங்க வீட்டுக்காரர் எனக்குப் பூ வைத்துவிட்டார்" என ஒரு பெண் கூறும் போது "வீட்டுக்காரர்" - மணவாளன் என்ற பொருளில் வருகிறார். "எங்க வீட்டுக்காரர் முதல் தேதியே வாடகை வாங்கி விடுவார்" என்று வருமிடத்தில் ஒரு வீட்டின் உரிமையாளர் என்ற பொருள்படவே "வீட்டுக்காரர்" வருகிறார்). ஏர்க்களம், போர்க்களம் இரண்டில் எவ்விடம் பேசப் பெறுகின்றதோ அதற்கேற்ப மள்ளர் முதலாமிடத்தில் உழவராகவும் இரண்டாமிடத்தில் வீரராகவும் உலா வருவதை உணரலாம்.

ஒலிப்பின் மாறுபாடுகளாலும் ஒரு சொல் இரு சொற்களாக மாறுவதுண்டு. ஆனால் பொருள் ஒன்றாகவே இருக்கும். 'மெதுவாக'

என்பதனைக் குறிக்கத் தமிழில் இரு சொற்கள் உள்ளன.

எடுத்துக்காட்டு 1. மெல்லப் பேசு!
மெள்ள வா!

எடுத்துக்காட்டு 2. மெல்லப் போ மெல்லப் போ.....
மெள்ள மெள்ள நடை நடந்து.....
(இரண்டும் திரைப்படப் பாடல் வரிகள்)

இதனை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும் பொழுதும் மள்ளர், மல்லர் ஆகிய சொற்கள் ஒலிப்பினால் வேறாகிப் பொருண்மையால் ஒன்றாகி நிற்பதை உணர முடியும். உரைகாரர்களில் சிலர் மள்ளர் என்ற சொல்லே பெருவழக்காக வருவது என்றும் வேளாண் மக்கள், போர் வீரர், மன்னர், தலைமக்கள் என்ற நான்கு பொருள்களிலும் அச்சொல் வருகிறது என்றும் குறிக்கக் காணலாம். சங்க இலக்கியச் சான்றுகள், பிற காப்பியச் சான்றுகள் இவற்றைக் காணுங்கால் கிடைக்கப் பெறும் பெயரமைவுகள் சில வருமாறு : மள்ளர், உழவர், உழத்தியர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர், மள்ளியர், பள்ளத்திகள், வேந்தர், மன்னர்.

## தேவேந்திர குலத்தார் :

இலக்கியங்கள், நிகண்டுகள் தரும் சொல்லாட்சிகள் பலவிதமான பொருண்மைகளைச் சுட்டுகின்றன. இலக்கணத்திலிருந்து சில செய்திகளை உடன் வைத்துப் பார்க்குங்கால் வேறுவகைப் புதிய போக்குகள் தென்படுகின்றன. "பண்டைத் தமிழ்ச் சான்றோர் நிலத்தை நால்வகையாகப் பாகுபாடு செய்தனர். மலையும் மலை சார்ந்த பகுதியைக் குறிஞ்சி என்றும், காட்டையும் காடு சார்ந்த பகுதியை முல்லை எனறும், வயலும் வயல் சார்ந்த பகுதியை மருதம் என்றும், கடலும கடல் சார்ந்த பகுதியை நெய்தல் என்றும் பிரித்துக் கண்டனர். இதனடிப்படையில் கடவுளர்களையும் பிரித்துக் கண்டனர். இதனைத் தொல்காப்பியம்,

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

என்று குறிப்பிடும். இங்கு குறிக்கப்படும் வேந்தனே தீம்புனல் (வயலும் வயல் சார்ந்த) மருத நிலத்தின் கடவுள் ஆவான். தொல்காப்பியரின்

இலக்கணப்படி மருத நிலத்தின் கடவுள் வேந்தன் என்று அறிகின்றோம். அப்புறம் ஏன் உரையாசிரியர்கள் மருத நிலக்கடவுளை வேந்தன் என்று குறிக்காமல் இந்திரன் என்றே குறிக்கின்றனர் என்பதற்கு மறைமலையடிகள் வருமாறு விளக்கம் தருவார்.

"ஆரியர்களின் இந்திரன், இடி, மின்னல், மழை முதலியவற்றிற்குரிய தெய்வமாதலோடு, அவர்தம் பகைவரோடு போராடுங்கால அவர்கட்கு உதவி புரிந்து வெற்றியைத் தருபவனாகவும், அவர்களும் சோமபானம் (மது) விலங்கின் இறைச்சி போன்றவற்றை நிறைய உட்கொண்டு அவர் வேண்டிய நலங்களையெல்லாம் அவர்க்கு விளைவிப்பவனாகவும் சொல்லப்படுகின்றான். தமிழர் வணங்கி இந்திரனோ (வேந்தன்) வயலும், வயல் சார்ந்த இடமுமாகிய மருத நிலத்தில் உள்ள உழவர்களால் மழையின் பொருட்டு மட்டும் வேண்டி வணங்கப்பட்ட மழைக்கடவுள் ஆவான. மழையின் பொருட்டாகவன்றி வேறெந்த நன்மைப்பேற்றின் பொருட்டாக வேனுந் தமிழர்களால் அவன் வணங்கப்பட்டவன் அல்லன். இருக்கு வேதத்திலுள்ள பாட்டுக்களில் மூன்றில் ஒரு கூறு இந்திரன் மேற்செய்யப்பட்டிருத்தல் போல, தமிழ் நூல்களில் எங்கும் ஒரு பாட்டேனும் இந்திரன் மேற் செய்யப்படவில்லை. தொல்காப்பியம் முதலான மிகப் பழைய தமிழ் நூல்களில் 'இந்திரன்' எனும் சொல்லே காணப்படவில்லை. மருதநிலத்து மக்களால் கொணடாடப்பட்ட தெய்வம் வேந்தன் என்று சொல்லப்படுகின்றது. தமிழர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் ஆசிரியர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் மழைக் கடவுளாதல் பற்றிப் பிற்காலத்தவரால் அவ்விருவரும் ஒருவராகக் கொள்ளப்படுவராயினர். அவ்வாறு கொள்ளப்படினும் தமிழர்க்குரிய வேந்தனுக்கும் இருக்கு வேத ஆரியர்க்குரிய இந்திரனுக்கும் ஏதோர் இயைபும் இல்லையென்பது நன்கு விளங்கும். உற்று ஆராயுங்கால் தமிழர்க்குரிய "வேந்தன்" என்போன் தமிழர்க்குள் முதன்முதற் தலைவனாய மழை பெய்யுங்காலமும் அம்மழையினுதவிய பற்பயிர் செய்தற்கேற்ற வளவிய நிலமும் அந்நிலத்தைத் திருத்திச் செல்வனே பயிர் விளைவிக்கும் வகைகளும் நன்குணர்ந்து உழவுத் தொழிலைக் கற்பித்துத் தமிழ் மக்களை மேல் நிலைக்குக் கொணர்ந்தவன் ஆதல் வேண்டுமென்பது புலபபடும். நன்றி செய்த முன்னோரை நினைத்து அவர்களைப் பரவுதல் (வழிபடுதல்) தமிழர்க்கு இயற்கையாதலால் அவர் கால் வழியில் வநத மருத நிலத்து உழவர் முதல் வேந்தனான அவனது ஆவியை வேண்டி வணஙகுவரானார் என்பர்"[1].

இந்திரன் வழிபாடு தமிழகத்தில் பரவலாக இருநதுள்ளது. 'இந்திர விழவூரெடுத்த காதை' என்று காப்பியத்தின் காதைத் தலைப்பே இடம்

பெறுமளவு இந்திரன் தமிழகத்தில போற்றப் பெறறுள்ளதை உணருதல் வேண்டும். தேவர்களின் தலைவனாகக் கருதப்பெறும் வடமொழி இந்திரனையே தமிழர்கள் கருதினரா என்பதில் கருத்து வேறுபாடுகள் உண்டு. சேயோன என்ற சொல் சிவப்பு மேனியன் என்பதைக் குறிக்குமா அன்றிச் சிவன் மகன் (அ) உமை மகன் என்பதைக் குறிக்குமா என ஐயுறுவார்களுணடு.

இலக்கியங்கள் ஊடுபுகுந்து தேவையான சான்றுகளை அலசினால் மட்டுமே விடை கிட்டும். எனினும் பண்டைத் தமிழகத்தில் உழவர்களின் தெய்வமாக இந்திரன் கருதப்பட்டான். "மள்ளர் என்போரை வீரராக, உழவராகக் காட்டும் சங்க இலக்கியம் மருத நில வாழக்கையை உழவர் வாழ்க்கையாகக் காட்டத் தவறவில்லை. சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் மருத நில மக்கள் ஏனையோரினும் நாகரிகத்தில் மேம்பட்டவர் ஆவர். இங்கு வாழ்ந்த குடிமக்கள் மள்ளர், உழவர், உழத்தியர், கடையர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர் என்று குறிக்கப்படுகினறனர். இன்று தேவேந்திரர் என்று அறியப்படும் இனத்தவர்களின் தொழில் வேளாண்மை ஆகும். வேறு தொழில்கள் இவருக்கு இல்லை. இவர்கள் இன்றும் தங்களின் கடவுள் தேவேந்திரன (வேந்தன்) என்று வணங்கி வருவதும் இவர்கள் சங்க கால மருத நில மக்களின் வழித்தோனறல்கள் என்பதை வலியுறுத்தும். சங்க காலத்தில் மழவர், மல்லர், மள்ளர், மறவர் என்று அழைக்கப்படும் மக்கள் போர் வீரர்களாக இருந்து மன்னர்களுக்கு உதவி புரிந்துள்ளனர். இவர்கள் தொன்மையான மறக்குடியினர் ஆவர். (அ. தட்சிணாமூர்த்தி, ப.60). மல்லர் என்பது மன்னரைச் சுட்டும் பெயராகவும் உள்ளது. மல்லர் பேரூர், பெருமான் என்பது மன்னன் இளந்திரையனைக் குறிக்கும் அல்லது போர் வீரர்கள் நிறைந்த ஊர் என்பதைச் சுட்டும் என்பார் இரா. தேவ ஆசிர்வாதம் (மூவேந்தா யார்? ப.90) சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்கு பெருமாள், மல்லன் என்ற பெயர்கள் வழங்கியதாகக் கூறுகிறார் ஜி.ஒப்பர்ட். மேலும் அவா மல்லன் என்பது வயல் வெளிகளில் அல்லது குளக்கரையில் வைத்து வணங்கப்படும் நாட்டுப்புறத் தெய்வத்தின் பெயரும் ஆகுமென்பார். (மேலது ப. 94) மேற்கண்ட கருத்துக்களிலிருந்து மல்லர் - மள்ளர் என்ற இனம் போர் வீரராகவும் மன்னராகவும் விளங்கியிருப்பது பெறப்படும்."

இது போன்ற குறிப்புகள் தொல்காப்பியரின் 'வேந்தன்' என்ற சொல்லிற்கு இந்திரன் எனறே விளக்கம் கூறப்பட்டு வந்துள்ளதைத் தெளிவுபடுத்தும். வேந்தன், இநதிரன், மள்ளன் போன்ற சொலலாட்சிகள் தொடர்புடையனவாகவே கருதப்பெறுகின்றன. இஃது ஆய்விற்குரியது.

**நாட்டுப்புற மரபுகளில்**

"மாரிப் பொருட்டால் வரங்குறித்து மள்ளரெல்லாம்
சேரிக் குரவையெழத் தெய்வநிலை போற்றினரே"

எனவரும முக்கூடற்பள்ளின (31) அடிகள கவனித்தற்குரியன. இவ்வாறு குரவையொலி கூட்டி வணங்கும போது அமமக்கள் இந்திரனை வழிபாடு செயகின்றமையை நாட்டுபபுறப் பாடலகள பலவாறாகக் காட்டுகின்றன.

'இந்திரனை நோக்கி எடுத்தேன் திரு அலகு"

என்று கூறியே பயிா நடுவதாகக் குறிக்கும் ஒரு பாடல்

பிறிதொரு பாடல்,

"மானத்தை நம்பியல்லோ ஐயோ வருணதேவா
மக்களும் பொறந்துவிட்டோம் ஐயோ வருணதேவா"

என்றும்,

"இந்திரனைக் கும்பிட்டு எடுத்தேன் விளைமுடியை
விளைமுடியும் சோம்பாமே மழை மாறி பொழிய வேணும்"

என்றும் மொழியும். இவ்வாறான .மளளர்களைக் குறித்து வரும் நூற்களே பளளு இலக்கியஙகள் எனப் பெயர் பெற்றன. உழததிப்பாட்டு எனபதன வளர்ச்சியே பள்ளு நூல்கள என்ற கருத்து, தமிழ்த திறனாயவாளர்களிடம் அழுத்தமாகக் காணப்பெறுகின்றது.

இந்தப் 'பள்ளு' என்ற சொல்லை அலசுகின்ற ஆயவாளர்கள பலர் மள்ளா் என்பதிலிருநதே பளளர் என்ற சொல் வந்திருக்க வேண்டும் எனக் கூறுகின்றனர். பள்ளு நூலகள் பல மள்ளர் எனற சொல்லை மிகவும் அதிகமாகப் பெய்துளளன. இது குறித்த குறிப்புரை ஒனறு வருமாறு : "தமிழ்ச் சமூக மரபில் உழவுத தொழில் செய்பவர் பளளர் எனப்பட்டனா. பள்ளமான நீா தங்குமிடத்தில் உழவுத் தொழில் செய்பவர்.

"ஆதாரமாகிய நீரனைத்தையுமே
சார்புறத் தாங்குவது பள்ளமதற்குரிய
தன்மையாற் பள்ளனெனச் சாற்றும் பேர் பெற்றேன்"

(பொய்கைப் பள்ளு - 26)

எனவரும பொயகைப் பள்ளுப்பாடல் இதனை வலியுறுததும. பளளர் நீர்நிலை அருகில் தங்குவதால பளளா எனபபட்டனா என்ற புலவரின கூறறு அவா பழைய பெயரான மள்ளர் எனபதை இநநூலில் அதிகமாகப்

பயன்படுத்துவதிலிருந்து அவருக்கே பிடிக்கவில்லை என்று தெரிகிறது. இவர்கள் குடும்பர் எனவும் அழைக்கப்பட்டனர். பள்ளர் - பள்ளியர், கடையர் - கடைசியர், மள்ளர் - மள்ளியர் வயல்களில வேலை செய்யும் மக்கள்".[3]

உழவர்களைப் பற்றிய பிரிதொரு செய்தியும் கருதத்தக்கது. ஏர்மங்கலம் என்பதை விளக்கும் போது தே.ஞானசேகரன்,

"ஏரின் சிறப்புரைத்து வாழ்த்துதல் ஆகும். இந்த ஏர்மங்கலம் தொல்காப்பியத்தில்,

"ஏரோர் களவழியன்றிக் களவழித்
தேரோர் தோன்றிய வென்றி
(தொல் - புறம் - 24)

என்ற நூற்பா ஏர்க்கள, போர்க்கள இயைபினைச் சுட்டும். இங்கு ஏரின் உழவரே போர்க்கள மள்ளராக விளங்குவதால் இவ்வாறு ஏரையும் போரையும் இணைத்துக் காட்டி இலக்கணம் செய்துள்ளார் தொல்காப்பியர் என்றும் கருதலாம். இந்த ஏர்மங்கலத்தைப் புறப்பொருள் வெண்பா மாலை "செந்நெல் கதிரோடு அறுவகையும் குவளையையும் கலந்து தொடுத்த மாலையை மேழியே கட்டிப் பாரை இரண்டாகப் பிளப்பாரைப் போற்றுவார் தொழப் பொன்னேர் பூட்டி நின்றோர் ஏரைப் பாடும் ஏர்மஙகலம்" என்று துறை விளக்கம் தரும். இது குடைமங்கலம், வாள்மங்கலம் மண்ணுமங்கலம் போன்தோர் புறத்துறையே ஆகும். மன்னனுக்குரிய துறைகளுக்கொப்ப உழவர்க்கும் உரைக்கும் மரபை வேளாண் வாகை, திணைநிலை என்னும் புறத்துறைகளாக அறியலாம்". (பு.பொ.வெ.மா.நூ. 34). இவ்வாறு ஏரையும் போரையும் ஒருங்கே கொண்டு வாழ்ந்த மள்ளர்களிடம் வழக்கிலிருந்த ஏர்மங்கலப் பாடல்கள் இன்றும் இவர்களிடம் வழக்கிலிருக்கின்றன. இப்பாடல்கள் குறித்து வையாபுரிப்பள்ளு நூலின் பதிப்பாசிரியர் அ.மா.பரிமணம் வருமாறு குறிப்பிடுவார்.

"குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் திணை அடிப்படையில் ஐந்திணை மக்கள் வாழ்வு போற்றும் இசைப்பாடல்கள் தோன்றலாயின. இநத இலக்கிய வளர்ச்சியை சிலப்பதிகாரக் காவியத்தில் காணப்படும் குன்றக் குரவை, வேட்டு வரி, ஆய்ச்சியர் குரவை, கானல்வரி முதலான இசைப் பாடல்களில் காணலாம். கானல் வரியில் அமைந்துள்ள ஆற்றுவரிப் பாடல்கள் மருத நில வளத்தையும் அங்கு வாழும் மக்கள் சிறப்பையும் உணர்த்துகின்றன. உழவர் சிறப்பு பேசப்பெறுவது "ஏரோர் களவழி" என்று தொல்காப்பியத்தில் குறிக்கப்படுகிறது. உழவுத்

தொழிலின் இன்றியமையாமையினால் அத்தொழில் புரியும் உழவர்களின் வாழ்வுச் சிறப்புகளைப் பேசும் பாடல்கள் ஏர்மங்கலம், உழவர் பாட்டு, உழத்தியர் பாட்டு என்று பலவாறாகச் சிறப்புற்றன. உழுதுண்டு வாழும் மக்கள் பள்ளர் என அழைக்கப்பட்ட பின்னர் அவர்கள் பற்றிய பாட்டு பள்ளுப்பாட்டு என்று அழைக்கப்பட்டிருக்கலாம்" என்பர் (பக் : 4). இக்கருத்து ஏற்புடையதே ஆகும்[4] என்பார்.

"தமிழிலக்கிய வரலாற்றில் சிற்றிலக்கியங்கள் என்னும் பகுப்பு தோன்றிய பின்னர் அவை பிரபந்தங்கள் என்று கூறப்பெற்றன. குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐவகைத் திணைகளுள் குறிஞ்சியை ஒட்டிக் குறவஞ்சியும், மருதத்தை ஒட்டிப் பள்ளும் இலக்கியப் பாங்கோடு உருவாயின. காப்பிய மரபுகளைத் தவிர்த்த பின்னைய சிற்றிலக்கிய நிலையில் பாமர மக்களோடு தமிழ் உறவு கொண்ட பாங்கே இவ்விலக்கிய வளர்ச்சிக்கு உரிய அடிப்படைக் காரணம். திணை நிலை வாரியாக ஐந்திணைக்கும் உள்ள பாடல்களில் சுவை நலங்களை உணர்ந்த புலவர்கள் மக்கள் வாழ்வியலோடு ஒன்றிக் குறவஞ்சி, பள்ளு ஆகியவற்றைப் பாடினர். தமிழ் விடுதூது என்னும் சிற்றிலக்கியம் இவற்றின் சிறப்பைக்

"குறமென்று பள்ளென்று
கொள்வார் கொடுப்பாய்க்கு
உறவென்று மூன்றிலும் உண்டோ?"

என்று கூறும் உழத்திப்பாட்டு, குறத்திப்பாட்டு முதலான சேரிமொழி தழுவியமையும் இலக்கியங்கள் நம் நெஞ்சைக் கனிய வைக்கும்.

தொல்காப்பியர் உழவர் சிறப்பைப் பற்றிப் பேசுவது 'ஏரோர் களவழி' என்பர். அதற்குப் பொருளாக ஏர்மங்கலம், உழவர் பாட்டு, உழத்தியர் பாட்டு, பள்ளுப்பாட்டு என்று பெயர்கள் பெறும். பன்னிரு பாட்டியல்,

'புரவலர் கூறி அவன் வாழிய வென்று
அகல்வயல் தொழிலை ஒருமை உணர்த்தினள்
எனவரும் ஈரைந்து உழத்திப்பாட்டே'

என்று கூறும் பள்ளிசை, பள்ளேசல் எனக் கூறப்பெறுவனவும் இவ்விலக்கிய மாண்பைச் சிறப்பிக்கும். இயல், இசை, நாடகம் எனனும் முத்தமிழ்ப் பாங்கோடு சந்த இன்பம், தான அறுதி, பண்நயம் ஆகியவை சிறக்கப் பள்ளுப்பாட்டு பாமர மக்களின் இலக்கியமாக விளங்குகின்றது. மக்களிலக்கியமாக இருந்த நிலை மாறிச் சான்றோரின் கருவியாகப் பின்னர் மாற்றம் பெற்று, காலப்போக்கில் தத்தம் சமய நலனைப் பரப்பும் இலக்கியமாக மாறியது.

'நெல்லு வகையை எண்ணினாலும், தமிழ்ப்பள்ளு வகையை எண்ண முடியாது' என்று கருதும் அளவுக்குப் பெருமை பெற்றது உண்மையே. தொல்காப்பியர் 'விருந்தே புதுமை' என்பர். இப்பள்ளு இல்க்கியம் விருந்திற்பாணி என்று கருதப்பெற்று முகவைப் பாட்டாகவும் பல்வரிக் கூத்தாகவும் சிறப்புப் பெற்றமையை நாம் காணலாம். அன்றாடம் பள்ளு இலக்கிய வரலாறு ஒரு சமுதாய வரலாறாக விளங்குதலையும் உணர வேண்டும்" என்று இரா. அரங்கசாமி கூறும கருத்தும் இங்கே உடன் வைத்து எண்ணுதற்குரியது.

மும்பாய் எனப்பெறும் ஊர் பம்பாய் என பெயர் மாற்றம் பெற்றதை நினைவு கூறும் சிவசண்முகம்

"தமிழ் மொழியில் மகரம் பகரமாக மாறியுள்ளதை நாம் காணலாம். பின்வரும் எடுத்துக்காட்டுகள் இம்மாற்றத்தைக் காட்டுகின்றன.

1. விரும்பு - விருப்பு (வினைச்சொல் பெயர்ச் சொல்லாதல்)

2. கரும்புச்சாறு - கருப்பஞ்சாறு (நிலைவழக்கு, கிளை வழக்காதல்)

3. கூம்பு - கூப்பு (பெயர் வினையாதல்)

4. திரும்பு - திருப்பு (செயப்படுபொருள்) குன்றிய வினை செயப்படுபொருள் குன்றா வினையாதல்)

5. சம்பந்தி - சம்மந்தி (வடசொல் நிலை வழக்கு கிளை வழக்காதல்)

..... மொழியில் மாற்றங்கள் தோன்றுவது தவிர்க்க இயலாதது என்றும், அம்மாற்றங்கள் ஒலியிலும் தோன்றுகின்றன என்றும் தமிழ் மெய்யொலியாகிய மகரம் மள்ளர் என்ற சொல்லில் பகரமாக மாறிப் பள்ளர் என்று ஆகியிருக்க இடமுள்ளது என்றும்... அறிகிறோம்".[6] தொல்காப்பிய உரைகள், தமிழிலக்கியங்களில் காணலாகும் இந்திரன் குறித்த செய்திகள், நாட்டுப்புற மரபுகளில் இந்திரன் பெயர் வழங்கப்பெறுதல் இன்னபிற செய்திகள் இவற்றால் அறியப்பெறும் கருத்துகள் வருமாறு :

1. பண்டைத் தமிழகத்தின் சமூக அமைப்பில் மள்ளர் என்றோர் இனத்தவரும் காணப்பெறுகின்றனர்.

2. மள்ளர், மல்லர், மழவர் போன்ற சொற்கள் ஒரு பொருள் சுட்டுவனவாக அமைகின்றன.

3. மள்ளர் என்பதற்குப் பெரும்பான்மையாக உழவர் எனறே பொருள் வழங்கப் பெறுகின்றது; வீரர் என்ற பொருளும் மருத நில மக்கள் என்ற பெயரும் அடுத்த நிலையில் கருதப் பெறுகின்றன.

4. உழவர்களே மள்ளர்கள் என்பதனை மெய்ப்பிக்கும் பள்ளுப் பாடல்கள் குறித்தற்குரிய.

5. மள்ளர்கள் தேவேந்திரனை வழிபடு கடவுளாக எண்ணினரென்பதனைப் பல குறிப்புகள் காட்டுகின்றன. நாட்டுப்புற இலக்கியங்களும் இதற்கு அரண் சேர்க்கின்றன.

6. ஒலிப்பு முறை மாற்றங்களால் மல்லா மள்ளர் என வருதல் போலவே மள்ளர் - பள்ளர் என்ற மாற்றமும் வந்திருக்கக் கூடுமென்ற கருத்து கவனிக்கத்தக்கது.

7. பெரும்பான்மை, புழக்கம் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு காணுங்கால் மள்ளர் என்பதற்கு உழவர் பெருமக்கள் என்பது முதன்மைப் பொருள். போர் மறவர் என்பது அடுத்த நிலையின் விளக்கமாகும்.

8. நாட்டுப்புற இலக்கியங்கள், இலக்கணங்கள், இலக்கியங்கள் யாவும் மள்ளரைக் குறித்துக் காட்டுகின்றன.

## சான்றென் விளக்கம்

1. தே. ஞானசேகரன், "தேவேந்திர குல வேளாளர் பெயர்க் காரணம்", இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக் கோவை, 3 ஆம் தொகுதி (1997) பக். 800 - 801

2. தே. ஞானசேகரன், ஸஸதேவேந்திர குல வேளாளர் வரலாறு", தமிழர் பண்பாட்டு வரலாறு, ப. 20.

3. சு. வேங்கடராமன், "பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள்", ப. 33,

4. தே. ஞானசேகரன், "ஏர்மங்கலமும் உழத்திப்பாட்டும்", பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள், பக் 12 - 13

5. இரா. அரங்கசாமி, "மள்ளர் பண்பாடும் இலக்கிய மரபும்" தமிழர் பண்பாட்டு வரலாறு பக். 35 - 36.

6. சிவசண்முகம், "ஒலியியல் அடிபபடையில் மள்ளர் - பள்ளர் பெயர் மாற்றம்", தமிழர் பண்பாட்டு வரலாறு, பக் 15-16.

## இயல் - 3

# கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு

*'ஆசைபற்றி அறையலுற்றபோதும்' கம்பரின் ஆளுமை முழுவதையும் கம்பராமாயணம் வெளிப்படுத்தும். அவரின் கைபட்டு எல்லாக் கதை மாந்தர்களும் பொலிவு பெறுவதைப் போல, அவரின் எழுதுகோல் தீட்டிய ஒவவொரு நிலப் பரப்பும் எழிலுறுவது வெளிப்படை. கம்பர் வருணிக்கும் நிலங்கள், அந்த அந்த நில மாந்தர்கள், அவர்களின் செயல்பாடுகள் யாவும் படிப்பாரின் கண்முன்னே நிழலோவியங்களாகவே புலப்படுகின்றன. அதுதான் கம்பவித்தகம். கவிதைக்குள் காட்சிகளை நெளியவிடுகின்ற, இழையவிடுகின்ற நுண்மாண் நுழைபுலம் கம்பரிடம் மிகுதியாகவே தென்படுகிறது. இவற்றையெல்லாம் கருதித்தான் 'கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்ற பயில்மொழி பிறந்திருக்க வேணடும். அததகு சிறப்புடைய கம்பர் தீட்டித் தந்துள்ள மள்ளர் மாண்புகளைக் கண்டுணர முயல்கிறது இப்பகுதி. மள்ளர்கள் - உழவர்கள என்பதாக முதற்பகுதியும் மள்ளர்கள் - வீரர்கள் என்பதாக அடுத்தப் பகுதியும் அமையும்.*

*முன்னியலில் சுட்டியபடி மள்ளர் என்பார் உழவுத் தொழில் புரிகுவார். கம்பனுக்கும் உழவர்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. இன்னும் சற்று மேலே போயக் கூற வேண்டுமாயின் 'கவிச்சக்கரவர்த்தி' எனப் புகழப் பெறும் கம்பன் உழவர்களிடம் இருந்து பாடலடி அறியத் தவங்கிடந்தவன. கர்ணபரம்பரைக் கதை என்பது போலத் தோன்றும் கட்டுக்கதையொன்று தமிழகத்தில் பரவலாக வழக்கிலிருந்து வருகிறது. மெதுவாக நடந்து வந்த கம்பன் ஏர்ககால் இழுத்தபடியே வயலுக்கு நீர் இறைக்கும் உழவர்களின் பாடலில் மயங்கி நின்றுவிடுகிறான்.*

மூங்கில் இலை மேலே
தூங்கும் பனி நீரே

*என்ற வரி வரும்போது குறிப்பிட்ட பரப்புக்கு நீர் சென்று சேர்ந்து விடுவதால் பாட்டையும் ஏர்க்காலையும் அப்படியே விட்டுவிட்டு அந்த இரண்டு உழவர்களும் சென்று விடுகின்றனர். அவ்விரண்டு வரிகளுக்கு அப்பால் தொடர்கின்ற வரிகள் என்னவாக இருக்கும் எனப் பல்வாறாகச் சிந்தித்த கம்பனுக்கு விடை கிடைக்கவில்லை. மறுநாள் உழவர்கள் வருமுன்னரே வயலுக்கு வந்து, காத்திருந்து வழிமீது விழி வைத்திருக்கிறான். வந்தவர்கள் பணியைத் தொடங்கினா. பாட்டும்*

தொடங்கியது. முதல் நாள் நிறுத்தி வைத்த இடத்திலிருந்து பாடல் தொடங்குகிறது. அவ்வரிகள்

தூங்கும் பனி நீரை
வாங்கும் கதிரோனே

கம்பனுக்கு விடை கிடைத்தது. இப்படியெல்லாம் நாட்டுப்புறப் பாடல்களின் நயம் புகழப்பெறும். மேற்குறித்தவை உண்மையான நிகழ்வா இல்லையா என்பதில் கருத்து வேறுபாடிருக்கலாம். ஆனால் கம்பன் தன் காப்பியத்தில் உழவர்களின் அருமை பெருமைகளை விரிவாகப் பேசியுள்ளது உண்மையாகும். கம்பன் தீட்டிய சித்திரத்தில் உழவர்களும் பொலிந்து நிற்கின்றனர்.

கம்பரின் இராமகாதையில் இடம்பெறும் பெருநிலங்கள் மூன்றெனக் கருதலாம். அயோத்தி, கிட்கிந்தை, இலங்கை ஆகியவையே அம்மூன்றும். பின்னவை இரண்டும் முறையே குரக்கினத்தாலும், அரக்கரினத்தாலும் ஆளப் பெறுபவை. அதனால் முதலாவதாய அயோத்தியைப் பற்றிய செய்திகளில் மள்ளர்களின் தொழிற்பாடுகள் எடுத்தோதப் பெறுகின்றன. பல்வேறு தொழில் புரிவாரை வருணிக்கும் கம்பன் பாலகாண்டததில் மருத நிலத்தை வெகுவாகப் புகழக் காணலாம். மதகுகளில் நீர்வரத்து மிகுந்து காணக்கூடிய சூழலில் ஆற்று வெள்ளத்தின் பரப்பையும் வீச்சையும் கண்ட உழவர்கள் எவ்வாறு உவகையுறிய நிலையில் ஆடி நின்றனர் என்பதனை விளக்குகின்றான் கம்பன்.

கதவினை முட்டி மள்ளர் கையெடுத் தார்ப்ப வோடி
நுதலணி யோடை பொங்க நுகர்வரி வண்டு கிண்டத்
ததைமணி சிந்த வுந்தத் தறியிறத் தடக்கை சாய்த்து
மதமழை யானை யென்ன மருதஞ்சென் றடைந்ததன்றே

மருத நில வருணனையாக இப்பகுதி அமைகிறது. அந்த மருத நிலத்தில் ஆற்றுவெள்ளம் திரண்டோடி வருகிறது. மதம் பிடித்த யானையைப் போல் மருதம் காட்சி தருவதை ஒரு சித்திரமாகத் தீட்டுகின்றான் கம்பன். இப்பாடலின் முதல் வரியிலேயே "மள்ளர்" இடம் பெறக் காணலாம். ஏனெனில் மழை நீரின் மிகுதியால் ஆற்றில நீர் வரத்து மிகுதியாயின் பயன் யாருக்கு? ஆற்றுப் பகுதியில் உழவுத தொழில புரியும் மள்ளர்களுக்குத்தானே! அவர்களின் பேருவகையைக கம்பன் தன வித்தையைக் கொண்டு நமக்குப் புரிய வைக்கிறான். நீரோடு நாமும் அடித்துச் செலலப்படுவதைப் போல நமக்குள் உணாவு ஏற்படுகிறது. நீர்க் கற்றையானது மதகுகளின் காப்புக் கதவுகளை முட்டி, மோதி,

மதங்கொண்ட யானையின் வேகத்தோடு வீச்சோடு அமைந்திருப்பதைப் பாடலில் நயமுற விளக்குகின்றார்.

நீர்ப் பெருக்கைக் கண்டு உழவர்கள் களிபேரு வகை கொள்வது இயல்பானது. கம்பன் அவர்கள் உளங்களித்தனர் என வெறுமனே கூறியிருந்தால் இப்பாடல் 'பத்தோடு பதினொன்றாய், அத்தோடு இதுவென்றாய்' மட்டும் இருந்திருக்கும். நீரின் மிகை கண்ட மள்ளர்களின் செயல்பாடுகள் எவையெனக் கம்பன் காட்டும் போது தான் மள்ளர்கள் கொண்ட மனவெழுச்சி, அகமகிழ்வு, உளப்பூரிப்பு முழுமையாகப் புலனாகும். மள்ளர் பெருமக்கள் தம் கைகளைத் தூக்கியவாறு ஆர்ப்பரித்து நின்றனர் என்கிறான் கம்பன். அவர்கள் நீரின் வழியாக உழவின் நிறைவில் கிட்டும் மகசூலை எண்ணியெண்ணி இறும்பூது எய்துவதாகவே கருத வேண்டும். கரந்தூக்கி ஆடல் ஆடுவது களிப்பைக் காட்ட மட்டுமன்று. களிப்புக்கான காலம் வந்ததை அறிந்து தொழிற்படவுமே. அரசியல் கட்சிகள் பேரணி நடத்துங்கால், உணர்வு நிறைந்த தொண்டர்கள் பேரணியில் பங்குபெறக் காணும் தலைவர்களின் கையசைப்பை இவ்வுழ வீரர்களின் கையெடுத்து ஆர்ப்பரித்து நின்ற நிலைக்கு ஓரளவு ஒப்புக் கூறலாம். மள்ளர்களின் மனங்களில் பெருக்கெடுத்தோடிய மகிழ்ச்சி வெள்ளமே - அகத்தினழகு முகத்தில் தெரியும் என்பதைப் போல அவர்களின் நகையூத்த முகங்களில் வெளிப்படுகிறது. கைகளிரண்டையும் உயரத்தூக்கி உளமகிழ ஆடிப்பாடும் போக்கு இப்பாடலில் புலப்படுத்தப்படுகிறது. பொங்கல் திருநாளை உழவர்கள் கொண்டாடினாற் போல இந்நிகழ்வு பொலிவுற்றிருந்தமையைப் பாடலால் அறியலாம்.

ஆற்று வெள்ளமும் அதனை முறையாகப் பயன்படுத்துவாரின் உற்சாகமும் சேர்ந்துவரின் அந்நிலப்பரப்பு செழித்துச் சிறக்காமல் போகுமா என்ன? கம்பனின் தனித்திறமையில் ஒன்று, இருபொருள்களை அருகருகே வைத்து எளிதாக விளக்கம் தருவது. உழவர்களின் மனமகிழ்ச்சி அவர்களின் வேலைப்பாட்டில் வெளிப்படுகிறது. விளைவு : அவர்கள் வாழும் பகுதி வளப்பம் நிறைந்ததாக மாறுதலடைதல். தமிழகத்தின் நால்வகை நிலங்களையும் உற்று நோக்குகின்ற கம்பன் பொருத்தமான அடைமொழியின வாயிலாக நிலங்களின் வலிவையும் பொலிவையும் வேறுபடுத்திக் காட்டுகின்றான்.

முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்த றன்னைப் பொருவரு மருதமாக்கி
எல்லையில் பொருள்க ளெல்லா மிடைதரு மாறு நீரால்
செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்றதன்றே

இப்பாடலின் வழியே கம்பன் புலப்படுத்தும் செய்திகள் கவனிக்கத்தக்கன. நீரோட்டச் சிறப்பு ஒரு புறமிருக்கவும் திணைகள் மயங்கின என்று குறிக்கப்பெறுவது சிறப்புடையது. இப்பாவிற்கு உரையெழுதும் உ.வே.சா. வின் குறிப்பு குறிக்கத்தக்கது. "நால்வகை நிலங்களுள் மருதம் வளப்பத்தால் மிக உயர்ந்ததாகலின் அதனைப் 'பொருவரு மருதம்' எனவும், நெய்தல் குறைந்த பயனுடையதாதலின் அதனைப் 'புல்லிய நெய்தல்' எனவும் விசேடித்தார்"[1] என்பது அவருரை. கம்பன் மிகக் கவனத்துடன் அடைமொழி தந்திருப்பதை உரைகாரர் உணர்ந்து 'விசேடித்திருப்பதாகவே இவ்வுரையைக் கருத வேண்டும். எனவே மள்ளர் மிகுந்த மருதநிலம் அவர்களால் வளப்பம் பெற்று ஒளிர்வதை மறைமுகமாகச் சுட்டுகின்றான் கம்பன். வெள்ளப் பெருக்கைக் கண்டு ஆர்ப்பரித்த மள்ளர்கள் அதன் வழியாகத் தம் மருதத்தை ஆற்றல் நிறைந்த தம் ஆக்கபூர்வச் செயல்பாடுகளால் 'பொருவரு மருதம்' ஆக மாற்றியமையை உணரமுடிகின்றது.

மருதத்தின் வளம் ஆங்கு உறையும் மள்ளர் இனத்தாரால் மேம்பாடு பெறுவதை நயமாகவும், சுருக்கமாகவும் கூறப்புகுந்த கம்பன் மள்ளர்களின் செயல்பாடுகள் பலவற்றையும் தனக்கேயுரிய முறையில் கூறுகின்றான். கீழ்வரும் பாடல்கள் மருத நில மள்ளர்களின் பணிகளை நிரல்படுத்துகின்றன. உரைகாரரான உ.வே.சா. ஏனைய காப்பியச் செய்திகளையும் உடன் வைத்து மள்ளர்களின் செயல்களை விவரிக்கக் காணலாம். முதலாவதாகப் பாடலைக் காணலாம் :

காத்தகான் மள்ளர் வெள்ளக்
　　கலிப்பறை கறங்கக் கைபோய்ச்
சேத்தநீர்த் திவலை பொன்னு
　　முத்தமுந் திரையின் வீசி
நீத்தமான் றலைய வாகி
　　நிமிர்ந்துபார் கிழிய நீண்டு
கோத்தகா லொன்றி னொன்று
　　குலமெனப் பிரிந்த மாதோ

உரையிலிருந்து பல செய்திகள் கிடைக்கின்றன. அவற்றில் மள்ளர் குறித்த செய்திகளை மட்டும் தனித்துக காணுங்கால் பலவற்றைப் பெறவியலும். "ஆற்றில் புது வெள்ளம் வருதலைத் தெரிவித்தற்குப் பறையறைதல் மரபு:

கவ்வையும் கடும்புனல் ஒலியும் காப்பவர்,
செவ்வனூர் ஆயிரஞ் சிலைக்கும் பம்மையும் (சீவக. 42)

கைபோதல் - கடந்து செல்லுதல்:

நிறையெனும் சிறையைக் கைபோய் - (சீவக.710)[2]

என்பது உரையின் ஒரு பகுதி. சொல் விளக்கம் தருமிடத்தில் உரைகாரர், "கால்காத்த மள்ளர் - கால்வாய்களைக் காத்து நின்ற உழவர்களின், வெள்ளம் கலி பறை கறங்க - வெள்ளம் வருதலைத் தெரிவிக்கும் மிக்க ஓசையுடைய கிணை என்னும் பறை ஒலிக்க கைபோய் (மதகுகளைக்) கடந்து சென்று"[3] என்றெழுதிடக் காணலாம். இவற்றால் பெறப்படும் செய்திகளைப் பட்டியலிடலாம். ஆற்றில் நீர்வரத்து மிகுதியாகும் போது மள்ளர்கள் மேற்கொள்ளும் பணிகளாவன :

1. எல்லாக் காலத்தும் மதகுகளைக் காப்பது
2. புதுவெள்ளம் வருமாயின் அறிவிப்பது
3. அறிவிக்க வாய்ப்பாகக் கிணை எனும் பறையினை ஒலிக்கச் செய்வது
4. மதகுகளைக் கடந்து செல்லும் நீரினளவைக் கண்டறிந்து ஆவன செய்தல்

மள்ளர் பெருமக்கள் காப்புச் செய்வதனை இப்பாடலின் வழியே உணர்ந்து கொள்ள முடிகின்றது. இத்துடன் திருக்குறளை உடன் வைத்துப் பார்ப்பது தகுவது :

"ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு (1038)

(இ-ள்) ஏரினும் எரு இடுதல் நன்று - அப்பயிர்க்கு அவ்வுழுதலி னும் எருப்பெய்தல் நனறு; கட்ட பின் அதன் காப்பு நீரினும் நன்று - இவ்விரண்டுஞ் செய்து களைகட்டால் அதனைக் காத்தல் அதற்கு நீர்கால் யாத்தலினு நன்று.

ஏர் ஆகு பெயர். காத்தல் : பட்டி முதலியவற்றான் அழிவெய்தாமற் காத்தல், உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால் யாத்தல், காத்தலென்றிம் முறையவாய் இவ்வைந்தும் வேண்டுமென்பதாம்" (திருக்குறள் - 1028, பரிமேலழகர் உரை).

மள்ளர் என்ற சொல்லிற்கு உழவர், மறவர் எனப் பொருள் கொள்ளப் பெறுகின்றது. அதற்கேற்பச் சில இடங்களில் உழ்வா, மறவர் இருவருக்குமான பொதுச் சொற்கள் காணப்பெறுகின்றன. இது பெரிதும்

ஆழமாகக் கவனிக்கப் பெற வேண்டிய ஒரு பகுதி. இறைவன், அரசன் இருவருக்கும பொதுவாயமையும் சொற்களை இவண் ஒப்பு நோக்குவது பயன் தரும். இறை, அரசன் இருவரும் உறையுமிடம் கோயில் எனப்பெறும். பள்ளி எழுச்சிப் பாடல், உலா வருதல், தனிக் கொடி பெறல், குடை பிடித்தல் இன்னபிறவும் அவ்வணணமே கருதப்பெறும். முறை செயது காப்பாற்றும் மன்னவனை இறை என்று கருதும் மனப்போக்கிற்குத் தகுந்தாற்போல் பெயரீடுகளும், நடைமுறை நிகழ்வுகளும் அமைகின்றன. அதனைப் போலக் 'காத்தல்' என்ற சொல மதகுகளைக் காத்தலாகிய தொழிலில் ஈடுபடும் மள்ளர்க்கும், பகையிடமிருந்து நாட்டைக் காக்கும் மறவருககும் பொதுவானது. குறளில் இயற்றலும் ஈட்டலும் வகுத்தலும் வருமாறு போலக் காத்தலும் இடம் பெறும். எனவே காப்புச் செய்தல் - மள்ளர், மறவர், மன்னர் மூவர்க்கும் உரியதாதல் வெளிப்படை. இதனைக் கருதி மூவரும் ஒருவரே என்ற கருத்தும் சிலரால் கருதப்பெறுகின்றது. மருத நிலத்தை மருத நில மள்ளனொருவன் மறவனாயிருந்து ஆட்சி செய்யும் போது மன்னனாகின்றான் என்பர். அதனைப்போல மள்ளா, மறவர் இருவருக்குமான பொதுப் பெயர்கள் சிலவற்றைக் கம்பனின் செவிநுகர் கனிகளில் பெறலாம். படை என்பது ஒரு சொல். மன்னனிடம் நால்வகைப் படைகள் இருக்கும். படைவீரன் என்று கூறும் போது மறவனைக் குறிக்கும். மள்ளரிடமும் படை உள்ளது. அது கலப்பை. கலப்பை என்ற கருவியின் பெயர் கூறாது அதனைப் படை என்ற சொல்லாட்சியால் கம்பன் விளக்குகிறான்.

படையுழ எழுந்த பொன்னும்
பணிலங்கர் உயர்த்த முத்தும்

எனத் தொடங்கும் பாடல் கவனிக்கத்தக்கது.

படை உழ எழுந்த பொன்னும்

(கலப்பையின்) கொழு உழுவதனால் மேலெழுந்த பொன்னும்[4] எனபது விளக்கம். இப்பாடலில் இடம் பெறும் 'கடைசியர்' என்ற சொல்லும் கருதுதலுக்குரியது.

கடைசியர் முகமும் போதுங்
கண்மலர்ந் தொழுகுமாதோ

என்பவை ஈற்றடிகள். உரை வருமாறு :

கடைசியர் முகமும் - பள்ளத்திகளின் முகங்களிலும், கண்மலர்ந்து ஒளிரும் - கண்கள் (மகிழ்ச்சியால்) விரிந்து பிரகாசிக்கும்[5].

இத்துடன் உரைகாரர் நிற்கவில்லை. உழவுத் தொழிலில் ஈடுபடும் பெண்டிரைக் குறித்த வரிகளைச் செதுக்குகின்றார். உ.வே.சா. "பள்ளத்திகள் தாங்கள் நட்ட பயிர்கள் செழிப்புற வளர்ந்து கண்ணுக்கினிய காட்சியுடன் பயன் தருதலை நோக்கி மகிழ்கின்றனர். அதனால் அவர்களுடைய கண்கள் மலர்ந்து ஒளிர்கினறன"[6] என்று உரைப்பகுதி பலவற்றைப் பேசுகின்றது. இவற்றிலிருந்து பெறப்பெறும் மள்ளர் மாண்புகளாவன :

1. மண்ணுக்கடியில் உள்ள பொன் மேலே இளர்ந்து வருமாறு மள்ளர்கள் தம் படைக்கருவியான கலப்பையால் ஆழ் உழுதலைச் செய்வர்.

2. உழப்பெற்ற அந்நிலப்பரப்பில் பள்ளத்தியர் எனப் பெறும் கடைசியர் பயிர் நடுகின்றனர்.

3. சரியான முறையில் உழுவதும் பயிர் நடுவதும் நிகழ்ந்தமையால் விளைச்சல் பெருகிப் பயன் பல கிட்டுமென எண்ணிப் பள்ளத்தியர் மகிழுகின்றனர்.

மள்ளர், மள்ளத்தியர் இருவரும் இவ்வாறு தம் தொழிலான பயிர் வளர்ப்பில் முழுமுச்சுடன் ஈடுபட்டால் என்னவாகும் என்பதைக் கம்பன் மறைமுகமாகக் கோடி காட்டுவதைப் போல இப்பாட்டின் இடையே

.......... நெல்லின்
மிடை பசுங் கதிரு மீவை
மென்றழைக் கரும்பும்

எனப் பாடுகிறார். சொல் விளக்கப் பகுதி வருமாறு :

"நெல்லின் மிடை பசுமை கதிரும் - நெல்மணிகள் செரிந்த பசுமையான கதிர்களும், மெல்தழை;எ கரும்பும் - மென்மையான தோகையையுடைய கரும்புப் பயிரும் (கண்மலர்ந்து ஒளிரும்) - கண்ணுக்கு விருந்தாய்ப் பரந்து தோன்றும்."[6] இப்பாடலால் கதிர்களின் வளமும் பொலிவும் ஒரு சேரப் புலனாகின்றன. இரண்டாவதாகப் பயிர் வளர்க்கும் உழவர்கள் கரும்பு நட்டும செழிக்கின்றனர் என்ற செய்தியையும் இப்பாடலால் பெறமுடிகின்றது. இவ்வாறு கரும்பு நடுவதால் அக்கரும்பினை ஆலைக்குக் கொணர்ந்து கரும்பாட்டுவர்.

கம்பனே தொடர்ந்து வரும் பாடல்களின் அச்செய்தியை நயமுறக் காட்டுவான். கடலில் உள்ள மீன்களெல்லாம் தித்திக்கும் தேன்மாந்திக்

களிப்பதாகப் புனையவரும் கம்பன் பல்வகை இடங்களிலிருந்து அந்தத் தித்திப்புத் தேன் கிடைப்பதாகப் பட்டியலிடுவான். அதில் முதலாவது இடம் பெறுவது ஆலையில் கரும்பிலிருநது பெறப்பெறும் இன்சுவைநீர்.

ஆலைவாய்க் கரும்பின் தேனும்
அரிதலைப் பாளைத் தேனும்

எனப் பாடல் தொடங்குகின்றது.

கரும்பாலைகளிலுள்ள கருப்பஞ்சாறாகிய தேனும் என்பது பொருள். மள்ளர்களின் பிறிதொரு செயலாகக் கரும்பாட்டுதலும் நிகழ்ந்ததைக் கம்ப காவியம் எடுத்து மொழிகிறது. கரும்பை உற்பத்தி செய்தலும், கரும்பாட்டிப் பயன்பெறலும் கம்பன் காட்டும் மருத நில வளப்பங்களில் சில.

ஒரே நேரத்தில் மருத நிலத்தில் பற்பல ஒலிகள் தோன்றுகின்றன என்பதை அரவம், அமலை, ஓசை, ஓதை, தமரம், துழனி ,, போன்ற சொற்களைக் கொண்டு பாட்டில் கூறுவான் கம்பன். பாடல் :

ஆறுபா யரவ மள்ள ராலைபா யமலை யாலைச்
சாறுபா யோசை வேலைச் சங்கின்வாய்ப் பொங்கு மோதை
ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றாகித் தம்மின் மயங்குமா மருதவேலி

கோசல நாட்டின்கண காணப்பெறும் மருத நிலப்பரப்பில் ஆறுகள் பாய்வதனால் எழும் ஒலி, மள்ளர்களின் கரும்பாலைகள் இயங்குதலால் எழும் ஒலி, கரும்பாலைகளில் இருந்து ஆற்றைப் போல வேகத்துடனும் நிறைவு கொண்டும் பாய்கின்ற கருப்பஞ்சாறு விழும் ஒலி... என வரிசைப்படுத்தக் காணலாம். இப்பாட்டால் மருதநில மள்ளர்கள் ஆற்று வெள்ளத்தை முறையாகப் பயன்படுத்தி சத்தான பயிர்களை விளைவித்துள்ளனர். கரும்பு நட்டோர் கரும்பாலையில் கருப்பஞ்சாறு பிழிந்து நின்றனர். பயிர்வளமும், கரும்புவளமும் மிகுந்திருநதமையைப் பாடல் 'வரிகளில் காட்டுகின்றான் கம்பன். இவ்வாறு காணுமிடமெங்கும் வளமை நிறைந்திருக்குமானால் மள்ளர்கள் நிறைந்துள்ள மருதம் எவ்வாறெல்லாம் வீற்றிருக்கும்? கம்பனின் புகழ்பெற்ற பாடலே விடை தரும் :

தண்டலை மயில்களாடத்
தாமரை விளக்கத் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக்
குவளைகண் விழித்து நோக்கத்

தெண்டிரை யெழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட
மருதம் வீற்றிருக்கு மாதோ

மருதமெனும் அரசன் கொலு வீற்றிருக்கும் நிலையைப் படம் பிடிக்கும் கம்பன், தொடர்ந்து மள்ளர்தம் மாண்பை, செயல்களை, பிறவற்றை எடுதேதாதக் காண்கின்றோம். நீரின் வரவு நிறைந்துள்ள சூழல. கழனியிலே ஆடவரும் பெண்டிரும் தத்தம் பணிகளில் ஈடுபட்டுள்ளனர். வ்யல் எவ்வாறு உள்ளது, மகளிர் எவ்வாறிருந்தனர், அருகிருந்த ஆடவர் எவ்வாறிருந்தனர் என்று கூறவரும் க்ம்பன் தீட்டும் பாடல் இது :

பண்கள் வாய் மிழற்று மின் சொற்
கடைசியர் பரந்து நீண்ட
கண் கை கால் முகம்வா யொக்குங்
களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர்
களைகலா துலாவி நிற்பார்
பெண்கள் பால் வைத்த நேயம்
பிழைப்பரோ சிறியோர் பெற்றால்

அந்நிலத்தில் களையுண்டா? உண்டு. ஆனால் பயிர்களுடன் வளர்ந்து நிற்கும் களையில்லை பின்பு வேறெந்தக் களை? இந்த வினாவிற்குக் கம்பன் தரும் விடை மனத்தைக் கவருகிறது. மள்ளத்தியர் வாய்திறந்து பேசுகின்றனர். ஆனால் பண் கலந்த பாடல் போல அவர்களின் பேச்சுகள் அமைந்துள்ளன. அவ்வளவு இனிமையுறப் பேசுகின்ற அம்மள்ளத்தியரின் பரந்து நீண்ட கண்கள் கருங்குவளை மலர்களைப் போன்று காட்சி தருகின்றன. கை, கால், முகம் ஆகியவையோ தாமரை மலராகத் தோன்றுகின்றன. இவ்வாறு மலர்களின் அணிவகுப்பாகத் தோன்றுகின்ற 'களை' அல்லாமல் வேறு பயிரினூடு வளரும் களை ஏதுமில்லை. இவ்வாறு மள்ளத்தியரின் அழகு, பேச்சு இவற்றைக் கூறும் போதே மருத நில வயல் 'களை' கட்டிவிடுகிறது. இப்பகுதியை விளக்க வரும் உரைகாரர் எழுதும் பகுதி வருமாறு :

"பெண்களின் அவயவங்களுள் கண்ணுக்கு - கருங்குவளை; கை, கால், முகம் - தாமரை, வாய் - செவ்வல்லி; இவைகளே வயல்களில் களையாக உள்ளன என்றதனால் நீர்வளமிகுதி பெறப்பட்டது"[7]. இவ்வாறு நீர்ப் பெருக்கைக் காணும் போது இயல்பாகவே மனம் துள்ளும். இனிய

மொழி கூறும். மள்ளத்தியர் அருகிருக்க மள்ளர் 'கள்' மாந்திப் பேருவகை பெறுகின்றனராம். கள்ளருந்திய மள்ளர்கள் களைபறித்தலை மறந்து மயங்கி நின்றமையை நயமுறக் காட்டுவான் கம்பன். வாயினோரம் கள்வழிவதையும் கருதாமல் உழவர்கள் பணி மறந்து நின்ற நிலையை உணர்த்தும் இப்பாடலில் மள்ளத்தியரின் வடிவ அழகு, சொற்றிறம் மள்ளர்களின் கள்ளுண்டு மகிழும் போக்கு ஆகியவை நன்கு உணர்த்தப் பெறுகின்றன.

மனமகிழ்வால் கள்ளுண்ட மள்ளர்கள் மிகச் சிறுகாலம் மயங்கி நின்றமையைக் கம்பர் கூறும் இப்பகுதியில் உள்பொதிந்து நிறகும் மற்றுமொரு கருத்து, பிறநேரத்தில் மளளாகள எக்காரணங்கொண்டும் மயங்கினாரில்லை என்பதுதான். அதனாலேதான் அம்மள்ளர்களின் வயல்களில் வளங்கள் குவிந்தன. உழுவார் உலகத்தாருக்கு ஆணி; பிறர் பின் செல்பவரென்பது வள்ளுவம். கோசல மக்கள் எவ்விதக் கவலையும் கொள்ளாமல் தத்தம் கடமைகளில் மூழ்கியவராய், அன்றாடப் பணிகளில் ஈடுபாடு கொண்டு ஆனந்தம் பெற்றமையைப் பாடல்கள் பலவற்றில் கூறி வருகிறான் கம்பன். உரைகாரர் அப்பாடல்களின் கருத்துக்களைத் திரட்டி ஓரிடத்தில் முழுமைப்படுத்துகிறார். மற்றவர்களின் பணிகள் எவ்வெவ்வாறு நிகழ்ந்தன எனப் புனைகின்ற கவிச்சக்கரவர்த்தி மள்ளர்களின் உழுதொழில் மாண்பினைப் பின்வரும் பாடலில் வரைகுவான்.

முள்ளரை முளரி வெள்ளி
 முளையிற முத்தும் பொன்னும்
தள்ளுற மணிகள் சிந்தச்
 சலஞ்சலம் புலம்பச் சாலில்
துள்ளி மீன் றுடிப்ப வாமை
 தலைபுடை சுரிப்பத் தூம்பின்
உள்வரா லொளிப்ப மள்ள
 ருழுபக டுரப்பு வாரும்

இப்பாடலுக்கான உரையை வரைந்த உ.வே.சா. வின் வரிகள் வருமாறு:

உழவர்கள் பகடுகளை உரப்பி ஓட்டி உழுதலால், தாமரை முளைகள் முறிதல், முத்தும் பொன்னும் தள்ளுறல், மணிகள் சிந்துதல், சலஞ்சலம் புலம்புதல், மீன்கள் துள்ளித்துடித்தல், ஆமைகள் தலைபுடை சுரித்தல், வரால்கள் தூம்பில் ஒளித்தல் ஆகிய பலவும் நிகழ்கின்றன. சலஞ்சலம் - ஆயிரம் வலம்புரிச் சஙகுகள் தன்னைச் சூழப் பெருமையோடிருக்கும் ஒருவகைச் சங்கு என்பர். மணிகள் 'சிந்தி' எனப பாடங்கொண்டு, சலஞ்சலம், (முத்துக்களாகிய) மணிகளைச் சிந்திப் புலம்ப எனவும் கூறுவர்.

*முளரி வெள்ளி முளையிற - 'தாமரைக் கிழங்கின் வெள்ளிய வேர்கள் அறுந்து போக' (பழைய உரை).*[8]

*ஐந்து பாடல்களில் கோசல மக்களின் மாண்புகளை அடுக்கின்றான் காப்பியப் புலவன். அத்தகு பாடல்களின் கருத்துக்களைத் திரட்டி வரும் உரைப்பகுதி படித்து மகிழத்தக்கது. அது...*

*"(47) கோசல நாட்டுமக்கள், வதுவையில் பொருந்துவாரும், இயல் இசைப் பயன் துய்ப்பாரும், கேள்வி மாந்து வாரும், விழாவணி விரும்புவாருமான பலவகையினரும், (48) வாரணம் பொருத்துவாரும், (49) ஏற்றையோடேற்றை வெகுண்டன நோக்கி ஆர்க்கின்றாருமான ஒரு சிலரும், உழு பகடு உரப்புவாராகிய மள்ளரும் என, இவ்வாறு, கவலையின்றி நாள் கழிப்போரும் தம் கடமையைச் செய்வோருமாக இருந்தனர் என முடிக்க. இவற்றால் நாட்டு வளம் நன்கு புலப்படுதல் காண்க."*[9]

*இதன் மூலம் ஊர்மக்கள் அனைவரும் மகிழ்வுடன் வாழ மள்ளர்களின் தொழில் காரணமாயமைவதை உணரலாம். சுழன்றும் ஏர்ப்பின்னதது தானே உலகு. அண்மைக் காலப் புதுக்கவிதை*

நாங்கள்
சேற்றில் கால் வைக்காவிட்டால்
நீங்கள்
சோற்றில் கை வைக்க முடியாது

*என அவரவரும் கடமையில் மூழ்கி, மனக்கவலை நீங்கி, கவலையேதுமின்றி வாழுகின்ற காட்சி எண்ணிப் போற்றுதற்குரியது. இதில் ஊர்வாழ உழைக்கும் உழவுப் பணியை மேற்கொள்ளும் மள்ளர்களின் மாண்பு உணர்த்தப்பெறுகின்றது.*

*மள்ளர்களின் நடைமுறைப் பணிகளை 'விலாவாரியாக' விவரிக்கப் புகுந்தானைப் போலக் கம்பன் நீள நினைந்து, நிரல்படுத்தி, நெஞ்சம் மகிழுமாறு மள்ளர்களின் பணிகளை இறக்குமதி செய்திருக்கும் பாடல் இனியது. பாட்டு வரிகளைப் படித்து விட்டு அககக்கண்ணில் அந்நிகழ்வுகளை ஒரு படத்தொடராகக் காணுங்கால் வயற்பணிகள் துல்லியமாகப் புலப்படும். ஏறத்தாழ எட்டு வேலைகள் இங்கே குறிக்கப்பெறுகின்றன. அவையாவன:*

1. *அறுவடை செய்தல்*
2. *நெற்கதிர்க் கட்டுகளைக் களத்துமேட்டில் குவித்துவைத்தல்*
3. *கதிர்க்கட்டுகளை மள்ளர்கள் கல்லிலடித்து*

நெல்லை ஓரளவு பிரித்தல்

4. குவியல் குவியல்களாக நெற்போர்களை அமைத்தல்
5. காளை மாடுகளைக் கொண்டு போராடித்தல்
6. வறியவர்க்கு நெல் தந்து மகிழ்தல்
7. புதிதாய் இல்லம் வருவார்க்கு விருந்து தந்து களித்தல்
8. நெற்கற்றைகளைத் தத்தம் இல்லங்களில் சேமித்து வைத்தல்.

இவையாவும் காலங்காலமாக நடைபெற்று வந்தவை. சில இன்னமும் தொடர்கின்றன. காளை மாடுகளைக் கொண்டு கதிரடிக்கும் பணிக்குக் "கடாவடி" என்று பெயர். 'மாடு கட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று யானை கட்டிப் போரடிக்கும் அழகான தென்மதுரை" என்பது வளர்ப்பத்தின் மேன்மையை விளக்கும் பாட்டுவரிகள். அதனைப் போன்று களத்து மேட்டிலேயே வறியாரைப் பேணும் வளமான மனப்பக்குவத்தைக் கம்பன் சுட்டுகிறான். உணவு விடுதியில் உணவுண்டு வரும் போது ஒரு அகமகிழ்வு, நிறைவான உணர்வு ஏற்படுவது இயல்பு. அப்போது விடுதியின் முகப்பில் நிற்கும் உணவற்ற வறியானைக் காணுங்கால் சிறுபொருளேனும் தருதல் வேண்டுமெனத் தோன்றும். அதனால் தான் பிச்சைக்காரர்கள் வேறெந்தக் கடைவாசலிலும் நின்று பிச்சை கேட்பதில்லை. உணவு விடுதியின் முன் நின்று இரப்பர். பண்டைய நாளில் உழுபணிகள் முடிந்து அறுவடையும் நிகழ்வுற்று, களத்துமேட்டில் நெற்குவியலை உருவாக்கும் போது மனம் மகிழும், மனம் நிறையும். அங்கே வந்து 'சிறிது' கேட்கும் இரவலர்க்குப் பெயர் களப் பிச்சைக்காரர். நிறைந்த மனம் மேலும் நெகிழ வந்த இரவலர்களுக்கு மள்ளர்கள் களத்தில் நெல்லை வாரிக் கொடுத்தனர்.

அதனைப் போலவே இல்லத்திற்கு வரும் புதியவர்களை வரவேற்க மள்ளர்கள் புத்தரிசியைக் கொணர்கின்றனர். ஐயமிட்டு உண், விருந்து புறத்திருக்கச் சாவா மருந்தெனினும் உண்ணாமை ஆகியவை தமிழர் பண்பல்லவா? 'விருந்தில்லாச் சோறு மருந்து' என்ற ஒற்றை வரிக்குள் பொதிந்துள்ள பண்பாடு உலகைச் சிறிதாக்கும் தமிழ்ப் பண்பாடு. விருந்தோடு விருந்துண்ணல் மள்ளர்களில் நாட்பணி போலும். இவ்வாறு பிறருக்கு ஈதலும், பிறருடன் கூடியிருந்து குளிர்ந்தும தத்தம் பணிகளில் கம்ப மள்ளர்கள் கரைந்தமையைப் பாக்கள் பலவாறாகக் காட்டுகின்றன. கம்பன மள்ளர்களோடு தோளோடு தோள்கொடுத்து நின்றதைப் போலப் பாடியிருப்பது கூடுதல் பொலிவு.

மள்ளர் பெருமக்கள் வளமான வாழ்வு பெற்றதை வாய்ப்பு வருமிடங்களில எல்லாம் கம்பன் எடுத்துரைக்கிறான். வாழ்வுத்

தேவைகளுக்காகப் பொருட்கள் பலவற்றைச் சேகரிக்கத் தொடங்குகின்றனர் மள்ளர்கள். அவ்வாறு பொருள் குவிக்குங்கால் அவர்கள் காட்டுவது

1. மென்மை
2. திறமை

தாம் எவ்விடத்தில் பொருள் சேகரிக்கிறோமோ அவ்விடத்திற்கு சிறு ஊறும் நேராதபடி அவர்கள் மென்மையாகப் பணிமேற்கொண்டனர். அதைப் போலக் காலம், இடம் அறிந்து அப்பணிகளில் ஈடுபடுவதால் திறமையும் வெளிப்படுகிறது. பூக்களிடையே சென்று தேனெடுக்கும் வண்டு பூக்களைச் சேதாரப்படுத்துவதில்லை. காலமில்லாக் காலங்களில் தேன் உறிஞ்சப் புறப்படுவதும் இல்லை. இங்கே மென்மையும், திறமையும் ஒருசேரப் புலனாவதால் அதனை உவமையாக்குகிறான் கம்பன்.

மதுவளமலரில் கொள்ளும்
வண்டென மள்ளர் கொள்வார்

இதனைவிடத் தெளிவாகவும் அழகாகவும் நிறைவாகவும் மள்ளர்தம் பண்புகளை வண்டுப் பணியுடன் இணைத்துக் கூற வேறு யாரால் முடியும்? கல்வியிற் பெரிய கம்பனால் மட்டுமே இது சாலும். இப்பணிகளில் ஒரு நேர்மையும் புலனாவதைப் படிப்பார் உணரவியலும். தம் தேவைக்கென மட்டும் கொள்ளுதல் இங்கே நிகழ்கிறது. எனவே கம்பர் காவியத்தில் வரும் மள்ளர்கள் மென்மை, நேர்மை, திறமை மூன்றையும் கொண்டிருந்தனர் எனக் கருதுவது பொருத்தமானதாகும்.

இவ்வாறான மள்ளர்கள் விருந்தயர்வது போலப் பிறரும் விருந்தயர்வதைக் கம்பன் சுட்டிக் காட்டிடக் காணலாம். மள்ளர்கள் தநத நெல் அரிசியாகி, அரிசி சோறாகி அது விருந்தாய் நிற்கும்போது எழும் ஒலியினைக கீழ்வரும் பாடல் உணர்த்தும்.

முத்துமுக் கனியி னானா
முதிரையின் முழுத்த நெய்யில்
செந்தயிர்க் கண்டங் கண்ட
மிடையிடை செறிந்த சோற்றில்
தந்தமி லிருந்து தாமும்
விருந்தொடுந் தமரி னோடும்
அந்தணர் முதலோ ருண்டி
யயில்வுறு மமலைத் தெங்கும்

உரைப் பகுதியை அடிக்கோடிட்டுக் காணுதல் நல்லது. "மள்ளருடைய உழைப்பால் வீடுவந்து சேர்ந்த பலவகை உணவுப் பொருள்களைக்

கொண்டு சிறந்த உணவு வகைகளைச் சமைத்து, நாள்தோறும் தென்புலத்தார், தெய்வம் முதலிய ஐம்புலத்தாறும் ஓம்பி எல்லோரும் இனிதிருந்தமை இதனால் கூறப்பட்டது"[10]. எனவே ஊா மகிழத் தம்மைக் கரைத்துக் கொள்ளும் மள்ளர் பணிகளை நினைந்து மகிழலாம்.

கம்பனிடம் தனிச்சிறப்பு ஒன்றுண்டு. அவன் எழுத்தில், சொல்லில், பொருளில் புதுமைகளைப் படரவிட்டவன். மள்ளர்கள் பற்றிய பாடல்கள் அவனால் பலவாறாகப் புனையப் பெற்றுள்ளன. அவர்களைப் பற்றிப் பாடிக் கொணடேவரும் கம்பன் திடீரெனக் 'குலமள்ளர்' என்றொரு புதுச் சொல்லைக் கையாளுகின்றான். குழு, இனம், குலம் ஆகியவை ஒத்த கருத்துடைய வெவ்வேறு சொற்கள். வரப்பால் சண்டையிட்டு, வரப்புகளைப் பெருக்கிப் பாகம் பரிப்பாரைக் கண்டதுண்டு. மள்ளர்கள் ஒரே குலமாய், ஒன்றுதிரண்ட குழுவாகப் பாடுபட்டமையை விளக்க வரும் கம்ப வரிகள் இவை :

கன்றுடைப்பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொ டர்ப்படுக் கும்வன வாரிசூழ
குன்று டைக்குல மள்ளர் குழுஉக்குரல்
இன்று ணைக்களி யன்ன மிரிக்குமே

ஊர்வாழ, உலகு உய்யக் கலப்பையைத் தோளில் ஏற்றும் இதுபோன்ற மள்ளர்கள் இருந்தால் அந்நாடே பொன்னாடு. கம்பன் மருதநிலத்தை மள்ளரிடமிருந்து தொடங்கி, வற்றாத வளங்காட்டும் நகர்ப் பொலிவில் முடிக்கின்றான். விளைபொருள் பெருகின் திருட்டும் பிற பிழைபாடுகளும் அழியும். வறுமை என்பது ஒழியும். இவற்றையெல்லாம் உள்ளடக்கித்தான் கம்பன் பா ஒன்றைப் புனைந்து தருகின்றான். போற்றுதலுக்குரிய பா அது.

வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லையோர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
ஒண்மை யில்லைபல் கேள்வி யோங்கலால்

'வரப்புயர' என்ற ஒன்றைச் சொல்வழியே பண்டை மூதாட்டி நாட்டை, நாட்டின் தலைமையை ஏத்தியதாக வரலாறு போற்றும். வரப்புயர நீர் உயரும், நீர் உயர நெல் உயரும், நெல் உயரக் குடி உயரும். குடியுயரக் கோன் உயர்வான் என அடுக்கிக் கொண்டே போவது தமிழ் மரபு. இங்கேயும் மருதநில வண்ணனையை உழவாகளிடம் தொடங்கி நிறைவில் நாடு தன்னிறைவு பெற்றுத் திகழ்வதாகக கூறி பெருமிதம் கொள்கிறான கம்பன். எல்லா இடமும், எல்லாமும் நிறைந்து வழியின் என்னவாகும்? விடை : கம்பனின் கீழ்வரும் பாடலும் தொடரும்

உரையும்

எள்ளு மேனலு மிறுங்குஞ் சாமையும்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும் பண்டியும்
அள்ள லோங்களத் தமுதின் பண்டியும்
தள்ளு நீர்மையிற் றலைம யங்குமே

"எள்ளும் - எள்ளையும், ஏனலும் - செந்தினையையும், இறுங்கும் - சோளத்தையும், சாமையும் - சாமையையும், கொள்ளும் - கொள்ளையும், கொள்ளையில் கொணரும் - மிகுதியாக ஏற்றி வருகிற, பண்டியும் - வண்டிகளும், அள்ளல் ஓங்கு அளத்து - (தொகுத்து) அள்ளுதல் மிகுந்த உப்பளங்களிலே உள்ள, அமுதின பண்டியும் - உப்பு ஏற்றிய வண்டிகளும், தள்ளும் நீர்மையின் - (அவ்வப்போது) இடம்விட்டுப் பெயர்க்க வேண்டிய தன்மை யுடையனவாய், தலை மயங்கும் - இடந்தோறும் கலந்து நெருங்கும். ஏ - அசை"[11].

கண்கொள்ளாக் காட்சியாக இவ்வாறு பல சூழல்களை வருணிக்கும் கம்பன் தன் இலக்கணப் புலமையை நெளியவிடும் இடங்களும் உண்டு. நிலமயக்கம் பற்றிய அவன் பாடல் குறிக்கத்தக்கது. உள்ளத்தில் மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரண்டு ஓடுமாயின் கூத்தாடல் இயல்புதானே! வளம் நிறையக் கண்டவிடத்து மகிழ்வு பிறத்தலும் அவ்வாறுதானே! ஆடவரோடு மகளிரும் கொண்டாட்டத்தில் பங்கு பெறுகின்றனர். உழத்தியர்கள் வாய்திறந்து பாடுகின்றனர்! அதனாலென்ன என்கினறீர்களா?

அந்தப் பாடல் அடுத்த நிலத்திற்குச் செல்கிறது. அது முல்லை நிலம். ஆநிரைகள் மேய்கின்றன. அப்பணியில் ஈடுபட்டுள்ள மேய்ப்பர்கள் இப்பாடல்களில் ஈர்க்கப்பெற்று நிற்கின்றனர். நிலங்கடநத நெடுந்தமிழ்ப் பாட்டைக் கம்பனின் பாட்டாலேயே நுகருவதுதான் பொருந்திவரும். அப்பாடல் :

கொன்றை யங்குழற் கோவலர் முன்றிலில்
கன்று ரப்புங் குரவை கடைசியர்
புன்ற லைப்புனங் காப்பிடை போதரச்
சென்றி சைக்கு நுளைச்சியர் செவ்வழி

மருதநிலத்தை வருணிக்கும் இடத்தில் மட்டுமின்றித் தன் மனத்திற்குகந்த இடங்களில் எல்லாம் கம்பன் உழவை, உழவரை, உழத்தியரைப் பாடி மகிழ்வதைப் பரவலாகக் காணலாம். அகலிகைப் படலத்துச் சான்றைக் காணலாம். பெண்டிர்தம் கண்களைப் புனைவுரையால் எடுத்துக் காட்ட முயல்கிறான் கம்பன். அவனது

எழுதுகோல் மிக அழகிய கண்கள் என்று மட்டும் சொல்வதில் மனநிறைவு பெறவில்லை. எதனைச் சொன்னால் அப்பொருளின் வடிவழகு முழுமைபெறும் என எண்ணுகிறான். மள்ளர்கள் நினைவுக்கு வருகின்றனர். மள்ளர் என்ற சொல்லைப் பெய்தவாறே புதுப்பாடல் பிறக்கிறது. அப்பாடல் வருமாறு :

பட்ட வாணுதன் மடந்தையர் பார்ப்பெனுந் தூதால்
எட்ட வாதரித் துழல்பவ ரிதயங்கள் வெறுப்ப
வட்ட நாண்மரை மலரின்மேல் வயலிடை மள்ளர்
கட்ட காவியங் கட்கிடை காட்டுவ கழனி

அப்பாடலுக்கான சொல் விளக்கக் குறிப்புகள் இன்னும் விரிவான செய்திகளைப் புகலும்.

"பட்டம் - பட்டத்தை யணிந்த, வாள்நுதல் - ஒளி பொருந்திய நெற்றியையுடைய, மடந்தையர் - பெண்களின், பார்ப்பு எனும் தூதால் - (கண்) பார்வை என்ற தூதினால், (உந்தப்பட்டு), எட்ட ஆதரித்து உழல்பவர் - அவர்களைக் கிட்ட விரும்பித் திரிகின்ற (காமுகராகிய) ஆடவர்களின், இதயங்கள் வெறுப்ப - மனம் வெறுப்படையும் வண்ணம், கழனி - (அந்நாட்டு) மருத நிலப்பரப்பில், வயல் இடை மள்ளர் - வயலில் வேலை செய்யும் உழவர்கள், கட்டகாவி - (களையாகப்) பறித்தெறிந்த நீலோற்பலப் பூக்கள், (அயலிடத்து நீர் நிலையில் உள்ள), வட்டம நாள் மரை மலரின் மேல் - (பெண்களின் முகம் போல) வட்ட வடிவமான புதிய தாமரை மலர்களின் மேல் (படிந்து), அம்கண் கிடை காட்டுவ - (பெண்களின்) அழகிய கண்கள் போலக் காணப்படுவனவாகும்."[12]

இவ்வரிகளால் நீலோற்பலங்களும் நிறைந்து பூக்கும் வளமுடைய நிலத்துக்குச் சொந்தக்காரர்களே மள்ளர்கள் என்பதும் களைகளைச் சரியான முறையில் நீக்குகின்றனர் அம்மள்ளர்கள் என்பதும் ஒருசேர அறிவுறுத்தப் பெறுகின்றன.

பிறிதொரு சான்றையும் நோக்க இயலுகின்றது. மள்ளர்தம் கரம் பட்டு வளங்கள் குவிந்தமையால் நிலபகுதி மேம்பாடு அடைகின்றது. அதனை விளக்கவரும் காப்பியப் புலவன் சரியான உவமை கூறிப் பாடுகின்றான். வளத்தின் நிறைவைக் காட்டிடச் சிறந்த சொல்லாட்சிகள் கட்டப்பெறுகின்றன. பொருட்கள் பலவற்றை அடித்துக் கொண்டு வந்த ஆற்றுப் பரப்பை விளக்கியபின, வரப்பைச் சரிசெய்யும் மள்ளர் அப்பொருட்களை ஆங்காங்கே குவித்து வைக்கும் பான்மையைச் சுட்டுகின்றார். கரைகள்தோறும் மள்ளர்கள் குவித்து வைத்துள்ள

பல்பொருளைக் கூறுமிடத்துக் கம்பன் 'ஆறு' எனப் பொதுப்பட மொழியாது 'பொன்னி' எனச் சிறப்பித்துக் கூறுவது குறிக்கத் தக்கது. பாடலும் அதனுடன் உரையும் நோக்கப் பெறுங்கால் கம்ப வித்தை தானாகவே புலப்படும்.

பாடல் :

வரப்பறு மணியும் பொன்னு மாரமுங் கவரி வாலும்
சுரப்புடை யகிலு மஞ்ஞைத் தோகையுந் தும்பிக் கொம்பும்
குரப்பணை நிரப்பு மள்ளர் குவிப்புறக் கரைக டோறும்
பரப்பிய பொன்னி யன்ன வாவணம் பலவுங் கண்டார்.

"வரம்பு அறு - அளவற்ற, மணியும் - இரத்தினங்களையும், பொன்னும் - பொன்னையும், ஆரமும் - சந்தனைக் கட்டைகளையும், கவரிவாலும் - கவரி மானின் வாலாகிய சாமரக் கற்றைகளையும், சுரம்புடை அகிலும் - காடுகளில் கிடைக்கும் அகிற் கட்டைகளையும், மஞ்ஞை தோகையும் - மயில் தோகைகளையும், தும்பிக் கொம்பு - யானைத் தந்தங்களையும் (இவை போன்ற பல உயர்ந்த பொருள்களையும்), குரம்பு அணை நிரப்பும் மள்ளர் - கழனிகளின் வரப்புகளை யெழுப்பி அமைக்கும் உழவர், குவிப்பு உற (அங்கங்கே) குவிக்கும்படி செய்தலுடன், கரைகள் தோறும் பரப்பிய - (தன்) இருகரைப் பகுதிகளிலும் பலவிடத்தே (அவற்றைப்) பரப்பிக் கொண்டு ஓடுகின்ற, பொன்னி அன்ன - காவிரியாற்றைப் போன்ற, ஆவணம் பலவும் - கடை வீதிகள் பலவற்றையும் கண்டார்.

நீண்டு கிடக்கும் கடைத்தெருவை ஆறாகவும், அதன் இரு புறத்தும் உள்ள பலவகையான கடை வரிசையைக் கரையாகவும் உருவகித்தார். 'யாறு கிடந்தன்ன அகல் நெடுந்தெரு' எனத் தெருக்களுக்கு ஆற்றை உவமித்தல் கவிஞர் மரபு. காவேரி, குறிஞ்சியிலும் முல்லையிலும் கிடைக்கும் பல சிறந்த பொருள்களைத் தன் வெள்ளத்திலே கொணர்ந்து, அலையாகிய கைகளால் கரையிலே ஒதுக்கியது போக, எஞ்சிய அப்பொருள்கள் நீரொழுக்குடன் சென்று வயல்களிலே நீர் பாயும் போது பரவிப் படிந்து கிடத்தலால் வயல்களின் வரப்பைச் சீர்செய்யும் உழவர், பரந்து கிடக்கும் பொருள்களை அங்கங்கே குவிக்க நேர்கின்றது என வளமிகுதியைப் புலப்படுத்தினார். 'ஆறு' எனப் பொதுப் படக்கூறாது, 'பொன்னி' என்றதனால், ஆசிரியரது நாட்டுப் பற்றுப் புலனாகும். ஏனைப் பல ஆறுகளினும் பொன்னி வளம் மிக்கதாதலின், அவ்வகையிலும் பொருந்துவதாகும்." [12]

இவ்வாறு மள்ளராகிய உழவர்களைக் கம்பன் காட்டுவான். அவன்

கவிகளில் காட்டும் மள்ளர் மாண்பை உணர்ந்து மகிழலாம்.

மள்ளர் என்ற சொல்லிற்கு உழவர், மறவர், மன்னர் எனப் பல்பொருள் கொள்ளப்பெறுவது முன்னரே சுட்டப் பெற்றது. களம் வேறாயின் தொழிலும் வேறாகும் என்பதுவும் கூறப்பெற்றது. பாடலில் இடம்பெறும் மள்ளர் என்ற சொல் உழவரையோ மறவரையோ நேரடியாகச் சுட்டாது போகுமானால் பொருள் கொள்வதில் தயக்கம் எழும். ஒரு சாரார் உழவரெனப் பொருள் கருத மறுசாரார் மறவரெனப் பொருள் கொள்ள ஏதுவான இடமொன்று காணப்பெறுகின்றது. இவ்விடத்தில் படிப்பார் பெறும் கூடுதல் நன்மை மறவரெனவும், உழவரெனவும் மள்ளரெனுஞ் சொல்லை எடுத்துக் கொள்ள வாய்ப்புண்டாகின்றது. இதனை வலுவாக்க அப்பாடற் பகுதியின் கீழ்வரும் பாடபேதக் குறிப்பும் உதவுகிறது. மள்ளர்தம் என்ற பாட்டுச்சொல் "மள்ளர்கை' எனவும் 'மன்னர்தம்' எனவும் பாடபேதத்துடன் விளங்குவதாகக் குறிப்பது ஆழ்ந்து கவனிக்கத் தக்கது. பாடல், விளககம், பிற நூலிற்கண்ட வண்ணம் அப்படியே கீழே தரப்பெறுகின்றன.

மூக்கிற் றாக்குறு மூரி நந்துநேர்<br>
தாக்கிற் றாக்குறு பறையுந் தண்ணுமை<br>
வீக்கிற் றாக்குறும் விளியு மள்ளர்தம்<br>
வாக்கிற் றாக்குறு மொலியின் மாயுமே

"மூக்கில் தாக்கு உறும் - மூக்குப் போன்ற இடத்திலே வாய் வைத்து ஊதப்பெறுகின்ற, மூரிநந்தும் - வலிய சங்குகளின் முழக்கமும், நோதாக்கில் தாக்கு உறு பறையும் - நேரான குறுந்தடியால் அடிக்கப்படுகின்ற முரசின் ஒலியும், தண்ணுமை - மத்தளத்தினது, வீக்கில தாக்கு உறும் விளியும் - வார்க்கட்டின் அதிர்ச்சியால் ஆன ஒலியும், மள்ளர் தம் - வீரர்களுடைய, வாக்கில் தாக்கு உறும் ஒலியின் - வாயினால் எழுப்பப்படும் வீர முழக்கத்தில், மாயும் - அடங்கிப் போகும். ஏ - அசை.

சங்கு, பேரிகை, மத்தளம் முதலியன நாள்தோறும் நடைபெறும் விழா முதலியவற்றில் ஒலிப்பன; அவ்வொலி யெல்லாம் போர் வீரர் அவ்வப்போது செயயும் வீர ஆரவாரத்தில் அடங்கிவிடும் என்கிறார். மள்ளர் - உழவர் எனக் கொண்டு, உழவர்கள் பகடுகளை உரப்பும் ஓசையில் மற்றவை அடங்கும் எனவும் கூறுவர்". [14]

இவ்வாறாக கம்பன் மள்ளராகிய உழவர்களின் மாண்புகளை விரிவாகவும் விளக்கமாவும் தன் காவியத்தில் கூறியிருப்பது எண்ணியெண்ணி மகிழத்தக்கது.

## மள்ளர் குலத்தினரின் வீரப்பண்பு

மள்ளர் என்ற சொல்லிற்குப் போர்வீரர் என்பது மற்றுமொரு பொருள். உழவர்க்குரிய இச்சொல் வீரரையும் குறித்தமை கவனிக்கத்தக்து. பண்டைக் காப்பியங்கள், இலக்கியங்கள் பலவற்றில் வீரர் பெருமக்களை உழவர் என்ற சொல்லுடன் இணைத்துக்கூறும் மரபு இருந்தது. கம்பனே, 'வாளுழவன்' (அயாத்தியா காண்டம் 61) என்ற சொல்லாட்சியைப் பெய்துள்ளான். 'வரிசிலை யுழவன' என்ற சொல் ஆரண்ய காண்டத்தில் வருகின்றது. கம்பனுக்கு முன்னதாகப் புறநானூற்றில் 'வாளேருழவ' (368) என்று புலவர் பெருமகன் பாடியிருக்கக் காணலாம். வில்லுழவர், வாளுழவர் என்றெல்லாம் படைக்கருவிப் பெயர்களுடன் உழவரென்னும் பின்னொட்டையும் கூட்டிப் பெயர்கள் வழங்கப்பட்டமையைப் பல சான்றுகளால் அறியலாம். உழவர்களும், வீரர்களும் ஒருநிலையில் கருதப்பெற்றமை இதனால் பெறப்பெறுகின்றது.

"வில்லேர் உழற்பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை" 872

என்ற திருக்குறளின் சொல்லாட்லும் இங்கே கவனிக்கப்பெற வேண்டியதாகின்றது. புறநானூற்றின் பாடலில் இடம்பெறும்

'தாளவழிப்படுத்த வாளேருழவ' புறம். 368

என்ற வரிக்குப் பொருள் கூறுமிடத்தில் "வீரர்களாகிய வைக்கோற்போரைக் கடாவிட்ட வாளாகிய ஏரையுடைய வீரனே" என்று குறிப்பர் [15]. உரைகாரரான உ.வே.சா.

'வில்லேருழவினின் நல்லிசையுள்ளி' புறம் 371

என்று புறநானூற்றின் 371 ஆம் பாடலுக்கான வரியைக் கண்ணுற்று "வில்லை ஏராகக் கொண்டு உழுதலையுடைய; உழவன் - வீரன்" [16] என்று குறிப்பார். இதன் வழி உழவன் சொல்லுக்கு வீரன் என்பது பிறிதொரு பொருள் என்பதும் பெறப்படும். அவ்வகையில் மள்ளர் என்ற சொல்லுக்கு உழவர், வீரர் என்ற பொருண்மைகள் பொருநதுவதையும் இவண கருதுதல் தேவை. புறநானூற்று உரையால் கூடுதல் சான்றாகச் சிலப்பதிகாரத்தின் கீழ்க்குறித்த வரிகளை கூறியுள்ளார்.

"ஆளழி வாங்கியதரி திரித்த
வாளேருழவன்" (சிலப் : 24 : 233 - 4)

"மாரிவளம் பெறா வில்லேருழவர்" (சில : 11 : 210)

இக்கருத்துக்களால் உழவர், மறவர் என்ற இருசொற்களும் ஒரு பொருள் புகல்கின்றன என்பதும் படைக்கருவி, கலப்பை போன்றவையும் பொதுச் சொற்களால் குறிக்கப் பெறுகின்றன என்பதும் புலனாகிறது.

வீரர்கள் என்ற பொருளில் மள்ளர் என்ற சொல்லைக் கம்பன் கையாண்டுள்ள பகுதிகளைக் காணபதற்கு முன் தமிழகத்தில் மறவர்கள் பெற்றிருந்த சிறப்புகளை ஓரளவு தெரிந்து கொள்வது தேவையானது. மள்ளரின் மாண்புகளைச் சரியாகப் புரிந்து கொள்ள இவ்வறிமுகம் உதவக்கூடும். சங்க காலத்தில் வீரர்களைச் 'சான்றோன்' என்ற சொல்லால் குறிப்பரென்பதற்குப் பதிற்றுப் பத்தின் ஒருபாடல் 'சான்றோர் மெய்ம்மறை' என்ற தலைப்பைப் பெற்றுள்ளமையை எடுத்துக் காட்டலாம்.

சங்க கால வீரநிலைப் பாடல்கள் உலகப் புகழ்பெற்றவை. 'புறம்' என்ற பகுதி தமிழரின் புகழை எடுத்துரைக்கும் பாங்கினது. "மேலைநாட்டு வீரநிலைப் பாடல்களுக்கும் தமிழ்ச் சங்கப் பாடல்களுக்கும் உள்ள நெருங்கிய ஒற்றுமைகளைக் கண்டறிந்து கூறுவார், கைலாசபதியவர்கள்.

அரச பதவிக்குப் போட்டியும் போராட்டமும் படையெடுப்பும் மிகுந்ததாய்த் தனி மனிதனுக்குச் சிறப்பளிக்கும் காலமாகச் சங்க காலம் இருந்ததென்பர். சங்கம் புறப்பாடல்கள், பெரும்பாலும் மன்னன் அல்லது மற்ற வீரன் முன்னிலையில் பாடப்படுவதாய்த் தனி மனிதன் வீரத்தைப் புகழ்வதாய் உள. அது வீரநிலைக காலப் பாடலின் இயல்பென்பார்.

சங்க காலத் தமிழ் மக்கள் புகழ்வேட்கை கொண்டிருந்தனர் என்பதை அவர் விளக்குவார்.

புகழ் பெறுவதற்கு ஒரே வழி போர். எனவே புகழ் பெறப் போரில் ஈடுபட்டனர் என்றும் அவர் கூறுவர்.

சங்கப் பாடலில் வீரனே தலைவனாகக் கருதப்பட்டான். வீரனே சான்றோன் எனப்பட்டான் என்பது அவர் கருத்து.

முன்னோரை நினைவுகூர்ந்து பாடுவது வீரநிலைக் காலப் பாடலியல்பாகும். அதற்குத் தமிழில் சான்று காண்பதரிது, எனினும் அரிதின் முயன்று சில சான்றுகளைத் திரட்டித் தருவார்.

பட்டியல்கள் பல சங்கப்பாடலுள இருப்பதை அவர் விளக்குவார். கடையெழு வள்ளல்கள், மூவேந்தர், மலர்ப் பட்டியல், பகைவர் பட்டியல், கடவுள் பெயர்கள் முதலிய பட்டியல்கள சானறு காட்டபபடும்" [17].

இவ்வரிகளால மள்ளராகிய போர்மறவர்கள, மன்னர்கள் ஆகியோா

சங்ககாலத்தும் பிறகும் புகழ்பெற்றிருந்தமை தெரியவருகிறது. மேலையிலக்கியங்களுக்கு நிகராக வீரநிலை தமிழிலக்கியங்களில் போற்றப் பெற்றுள்ளது.

சங்க இலக்கியங்களைப் போலவே காப்பியங்களிலும் வீரர்களின் மாண்பு உணர்த்தப்பெறுகின்றது. சான்றாக,

"உலகப் பெருங்காப்பியங்களில் ஒன்றாக வைத்துப் பாராட்டும் சிறப்பு சீவக சிந்தாமணிக்குண்டு. திருத்தக்கதேவர் தம் காப்பியத்தில் நாமகள் இலம்பகம் முதல் முக்தி இலம்பகம் வரையில் மள்ளர், மல்லர் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

'மள்ளர்' என்ற சொல் வழக்கை 18 இடங்களிலும்,

'மல்லர்' எனப் 14 இடங்களிலும் பயன்படுத்துகின்றார்

மள்ளர் 'குவளைகள் சூடி' (17) இருப்பார். 'செருவிளை கழனி மள்ளராய்' (18) விளங்கினார். கைகளில் வல்வில் உடையவர மேலும் 'வார்கழல் மள்ளராய் (19) காட்சித் தருகின்றனர்.

பூமகள் இலம்பகத்தில் நூலாசிரியர் விளக்குகளால் ஒளியூட்டிய பொன்னறையில் சென்றடைந்தார் எனக் குறிப்பிடுகின்றார்.

. . . . . கோயில் எல்லாம்
காய்பொற் சூடிகைக் கதிர்க்கை விளக்கேந்தி
மள்ளர் மேய் பொன் னறையும் (20)

பெரும்பாலான இடங்களில் போர் வீரராகச் செயலாற்றித் தன் திறமையை வெளிப்படுத்தியதாகவே காட்டுகின்றார்.

'மாரியிற் கருங்கணை
சொரிந்து மள்ளர்" (21)

சிங்கம் வளைத்துக் கொண்டது போல் பகைவரை வளைத்துக் கொள்வர். போர்க் களத்தில் படை நடத்திய செய்தினை,

"கோட்டுமீன் குழாத்தின் மள்ளர்
ஈண்டினர் மன்னர் சூழ்ந்தார்" (22) என்றும்

"கொட்டினர் முரசும் மள்ளர்
ஆர்த்தனர்" (23) எனறும்

"வண்கழல் அணிந்து மள்ளர்
வாள் வலம் பிடித்து"

இருந்தனர் என்றும் விளக்கம் தருகிறார்.

'மல்லர்' என்ற சொல்லை 'வளப்பம்' என்ற பொருளில் பயன்படுத்தியுள்ளார்.

'மல்லலம் குமரர்' (25)

'மல்லல் குன்றேந்தி' (26)

திருத்தக்கதேவர் கழலணிந்த போர் வீரர்களாகவே மிகுதியான இடங்களில் சுட்டிக் காட்டுகின்றார். சுரமஞ்சரியார் இலம்பகத்தில் ஒரு பாடலில் (பா. 2296) மட்டும் 'செருவிளை கழனி மள்ளர்' ஆரவாரத்தோடு ஒப்பிடுகையில் கழனியில் வீரம் விளைவிக்கும் தன்மையினராய் காட்டுகினறார்.

மன்னருக்கு உற்ற தொழில் புரிவோராய் காப்பியக் காலத்தில் இருந்து வந்துள்ளனர் என்ற செய்தியை உய்த்துணர முடிகிறது. கம்பர் உழுதொழில் புரிவோராய் காட்டிட, திருத்தக்கத் தேவர் வாள் வலம் பிடித்த தன்மையினராய் மள்ளா தம் வரலாற்றைப் புலப்பட வைக்கின்றார்.

காப்பியங்கள் தரும் செய்திகள் மூலமாக மள்ளர் 'விளைகழனி' விளைவிப்போராய், 'செருகளம்' காப்போராய்த் தொழில் புரிந்து வந்துள்ளனர் என்ற செய்திகளைப் பெறமுடிகிறது" [18]. என்ற பகுதியைச் சுட்டலாம்.

இத்தகைய செய்திகள் புலப்படுத்தும் செய்திகள் இரண்டு

1. எல்லாக் காலத்திலும் மள்ளர்கள் போற்றப்பட்டுள்ளனர்.

2. உழவர், மறவர் என்ற இருநிலைகளிலும் மள்ளரினம் மிகுதியாகவே புகழைப் பெற்றிருந்தது.

இதனுடைய தொடர்ச்சியாகவே கமபனும் தன் காவியத்தில் வீரரைக் குறித்திருக்க வேண்டும். எனினும் மள்ளரென்பார் உழவர் என விரித்துக் கூறியவண்ணம் மளளரென்பார் வீரரெனச் சிறப்பித்துக் கூறவில்லையோ என்று கருதுமாறு ஒரு சிறிதே கூறியிருப்பது வெளிப்படை. வீரர்தம் பெருமையைப் பாடல்களின வழியே புலவர்கள் வெளிப்படுத்தியமைக்குக்

காரணங்கள் உண்டு. வீரம், தமிழரின தலையாய கூறாகக் கருதப்பெற்றது. 'புகழெனின் உயிருங்கொடுக்குவர்' எனபது ஒரு பதச்சோறு. போர்களின் மிகுதிக்கு இதுவே காரணம். மள்ளர்கள் வீர மரணமுறுவதை விழைந்தனர். 'ஊன்தடியாயினும் வாளால் அறுத்துப்' புதைக்கும் மரபு தமிழருக்குரியது. மள்ளர்களின் தலைவன் மன்னன். அவனும் போரில் இறங்கித் தன் வலிவைக் காட்டினான். இறந்தவனுக்கு நடுகல் வைத்துப் பீலிசூட்டி, மாலையிட்டுப், பேரும் புகழும் எழுதி மகிழ்ந்தனர். வணங்கினர்.

இம்மரபுகளை அலசும் கைலாசபதி தன் 'பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்' என்ற நூலினுள்ளே "பண்டைத் தமிழகத்திலே நடைபெற்ற போர்களின் விளைவாகத தலைவர்கள் தோன்றினார்கள்; அரசுகள் தோன்றின; இப்போர்களிலே தலைவருக்காக அதாவது மன்னருக்காக இறப்பது சிறந்த செயல் என்று புலவர் பிரசாரஞ் செய்தனர். 'வேந்து விடுதொழில்' என்று அதனைக் கூறினர். வேந்தனுக்காகப் போரிட்டு இறந்தவர்களை உயர்த்திப் பாடுவதன் மூலம் வீரமரணத்தின் விழுமிய பணபை நாட்டிற் பரப்பினர்.

ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழர் என்னும் நூலிலே கனகசபைப்பிள்ளை பின்வருமாறு கூறியுள்ளார் : 'மனனனது புடையர் குழுவில் ஒரு பகுதியாகிய பாணரும், பொருநரும், வீரரது போர் வேட்கையை வளர்த்து அதற்கு உரமிட்டனர். வெற்றியை இலட்சிய மாக்கினர். அமைதியான நேரங்களிலே மனனனையும் அவனைச் சூழ்ந்தோரையும் தமது வீரமிக்க பாடல்களினால் மகிழ்வித்தனர். அம்மன்னரின் மூதாதையர் ஈட்டிய வெற்றிகளை நினைவில் நிறுத்தினர். யுத்த காலத்திலே போர் வீரரோடு தாமும் போர்க்களஞ் சென்று போர் வீரரை உற்சாகப் படுத்தி அருஞ்செயல்கள் ஆற்றும்படி ஆசை காட்டினர்"[19] எனக் குறிக்கக் காணலாம்.

போரின் காரணத்தால் ஏற்பட்ட வர்க்கப் பிரிவுகளை அவர் சுட்டிக் காட்டுகிறார். உற்பத்தி, வேலைப் பிரிவினை, அரசியல் போன்றவற்றை உள்ளடக்கிய அவரின் கருத்து உணரத்தக்கது. போரின் தேவைகளுக்கான காரணங்களையறிய அப்பகுதிச் செய்திகள் தேவை. அப்பகுதி வருமாறு :

"ஆடுமாடுகளை வளர்ப்பது, விவசாயஞ் செய்வது, குடிசைக் கைத் தொழில்கள் செய்வது முதலிய துறைகளில் உற்பத்தி பெருகியது. இதனால் மனிதனின் உழைப்புச் சக்தி தனது தேவைக்கு அதிகமாகவே உற்பத்தி செய்ய முடிந்தது. ஒவ்வொரு குலத்தைச் சோந்த உறுப்பினரும, ஒவ்வொரு குடுமபத்தைச் சேர்ந்த அங்கத்தினரும் நாளாந்தரஞ் செய்துவந்த வேலை இதனால் அதிகரித்துக் கொண்டே வந்தது. இன்னும் அதிகமாக உழைபபுச்

சக்தி இருந்தால் நல்லது என்று விரும்பினார்கள். இவ்விருப்பத்தைப் போர் நிறைவேற்றி வைத்தது. போரிற் பிடிபட்டவர்கள எல்லோரும் அடிமைகளாக ஆக்கப்பட்டார். ஆகவே அன்று நிலவிய பொதுவான வரலாற்று நிலையில, முதல் மாபெரும் சமுதாய வேலைப் பிரிவினை உழைபபின் உற்பத்திச சக்தியை உயர்த்தி, அதாவது பொருட் செல்வத்தை அதிகப்படுத்தி, உற்பத்தித் துறைகளையும் விஸ்தரித்து, அவற்றின் உடனிகழ்ச்சியாக அடிமை முறையையும் உண்டாககியது. எனவே இம்மாபெரும் சமுதாய வேலைப் பிரிவினையிலிருநது முதன் முதலாகச சமுதாய மாபெரும் வர்க்கப் பிரிவினைக்கு ஆளாயிற்று. தலைமக்கள் - அடிமைகள், சுரண்டுகிறவர்கள் - சுரண்டப்படுபவர்கள் என்று இரு வர்க்கங்கள் உண்டாயின. இது எம்மை நாகரிகத்தின் வாயிற்படிக்குக் கொண்டு வந்து விடுகிறது" [20] எனவே சமூகத்தில் போரும் அதற்கான பின்புலங்களும் எவ்வாறமையும் எனத் தெரியலாம். போரில் ஈடுபட்டோரைப பலவாறாகப் படைப்பாளிகள் புகழ்ந்தமைக்கான காரணமும் இதனால் ஒருவாறு புலனாகும்.

போரில ஈடுபட்ட மாவீரர்களையும் மன்னர்களையும் இலக்கியம், கல்வெட்டுகள், மெய்க்கீர்த்தி போன்றவை பதிவு செய்துள்ளன. இலக்கியப் படைப்பாளிகள் மரபு பிறழா வண்ணம் மளளர்களின செய்கைகளை வருணித்துள்ளனா. கம்பனும் தன் காப்பியத்தில் தன்பங்கில் சில செய்திகளை விளக்குகின்றான். பொது நிலையில் கம்பனின் கவிதைகளை விளக்குமிடத்தில்,

"கம்பராமாயணத்தில், யுத்த காண்டம் இராமாயணக் கதையின் சிக்கலைத் தவிர்த்தற்குரிய பாகமாக அமைந்திருக்கிறது. இந்தப் பாகத்தில் போர்த்திறனும் அது செய்வார்தம் வன்மையும், படையின் அணி இலக்கணமும், போர்த் தந்திரமும், சந்து செய்வார் தாம் இலக்கணமும் இவற்றிற்கு மேலாக, கருவிப் பலத்தினும் அறிவுப பலம் ஓங்கி நிற்றலும் ஆகிய பல செய்திகள் காணப்படுகின்றன" [21] என்று மு.த. வேலாயுதனார் குறிப்பிடுவார். இசசொற்களின் வழியே கம்பன் தன் படைப்பில் மள்ளர்தம் மாணபை உரைத்துள்ள பாங்கின் அறிமுகம் தெரிகிறது. நாலுக்குள் நுழைந்து காணின் கம்பன் 'மள்ளர்' என்றே சொல்லாடியிருப்பதும், மள்ளரின் செய்கைகள் அரக்கரிடத்திலிருந்தும், குரக்கினத்திலிருந்தும் வேறுபடடு அமைந்திருப்பதும் புலப்படும். வானரர் களங்காண் படலத்தில் "இனமான வீரராகியாடிய பரம்படிக்கும் தொழிலையுடைய கூட்டமான உழவர்கள்" என்ற விளககதுடன மள்ளர் என்ற சொல் பயின்று வருகினறது. இனி, பாடலைக் காணுவது தகுவது.

"நெடும் படைவாள் நாஞ்சிலுழு நிணச் சேற்றினுதிர நீர் நிறைந்த காப்பிற்
கடும்பகடுபடி தோய்ந்த கரும்பரம்பின் இனமள்ளர் பரந்த கையிற்
படுங்கமல மலர் நாறு முடிபரந்த பெருங்கிடக்கைப் பரந்த பண்ணைத்
தடம்பணையின் நறும்பழனந் தழுவியதே எனப்பொலியும்
தகையுங்காண்மின்"

*இதற்கான உரைப்பகுதி : நெடிய வாட்படையாகிய கலப்பையினால் உழுகின்ற நிணமாகிய சேற்றிலே உதிர நீராகிய நிறைந்த நீர்க் கட்டினையும், விரைவுள்ள யானைகளாகிய எருமைக் கடாக்கள் படிந்து தோயப் பெற்றதாகி விரைவாகப் பரவுதலையுடைய இனமான வீரராகிய கடிய பரம்பு அடிக்குந் தொழிலினையுடைய கூட்டமான உழவர்கள் பரந்த (இரு) புறத்தினையும் (பெற்று) முளைத்த தாமரை மலரின் மணம் நாறுகின்ற தலைகளாகிய நாற்று முடிகள் பரந்து கிடந்த பெரிய வயல்களைக் கொண்ட நறிய மருதநிலத்தின் தன்மையைத் தழுவியதெனப் பொலிகின்ற தன்மையையுங் காண்மின்;*

*போர்க்களத்தை மருதநிலம் போலுமென உருவகவணி வகையாற் கூறினார் : இந்த உருவகத்திற்கு, 'நெடும்பகடு, கடும்பரம்பினினமள்ளர், நாறு முடி' என்ற இடங்களிலுள்ள சிலேடையணி அங்கமாய் நின்றது. நெடும்பகடு ஆகிய பகடு, கடும் பரம்பின் இன மள்ளராகிய கடும்பரம்பின் இன மள்ளர், நாறுகின்ற முடியாகிய நாற்று முடி என்க. கலப்பையும், உழுஞ்சேறும் நீர் தேக்குதலும்; எருமைக் கடாக் கிடந்த பரம்படிக்குந் தொழிலைக் கொண்ட மள்ளர் பரந்த மருங்கும், நாறுமுடி பரந்த பெருங்கிடக்கையும், பண்ணை மகளிர் கூட்டமும் மருதநிலத்துக் காணப்படும் வாட்படையும், நிணமும், உதிரத்தேக்கும், கடாக்களிறு தோய்ந்த பரம்பினின மள்ளர் பரந்த மருங்கும், தாமரை மலர் நாறுமுடி பரந்த கிடக்கையும் இந்தப் போர்க்களத்து உள்ளன என்க."* [22].

*மேற்குறித்த உரையும் பாட்டும் உழவரை முன்னிறுத்துவதாகக் கொள்வதே முதன்மையானது. முறையானது. எனினும் உழவர், வீரர் என்ற இருபெயர்க்கும் பொதுவான மள்ளர் என்ற சொல்லாட்சியும், படைக்கருவி பற்றிய சொல்லாட்சியும் கருதத் தக்கவை. போர்க்கள வருணனை என்பதால் மள்ளரென்பது பொருத்தமுறப் பயன்படுத்தப் பெற்றுள்ளது எனக் கொள்ளுவது சாலும்.*

*மள்ளர் என்ற சொல்லால வீரரை மட்டும் குறிக்கும் இடம் கம்பன் போர் வீரராகத் தோன்றும் மள்ளரின் மாண்பைக் காட்டும் இடமெனக் கருதலாம். போர்க்கள வருணனையில் திளைக்கும் கவிச்சக்கரவர்த்தியின் பாடலடிகள் வருமாறு :*

"தேருந்தெறு கரியும்பொரு சின மள்ளரும் வயவெம்
போரிற்றலை யுகள்கின்றன புரவிக்குல மெவையும்
பேருந்திசை பெறுகின்றில பணையின் பிணை மதவெங்
காரின்றரு குருதிப்பொரு கடனின்றன கடவா"

இப்பாடலில் மள்ளர் என்ற சொல்லிற்கு உழவர் எனப் பொருள் கொள்ள இயலாது. மேலும் அதிகாயன் வதைப்படலத்தில் முனனும் பின்னும் போர்ச் செய்திகளை எழிலுற வருணிக்கும் இடத்தில் போர்வீரரின் அருமைப்பாட்டை விளக்குவதற்காகக் கம்பன் இப்பாடலைக் கையாள்கின்றான். சின மள்ளரென்பதற்குரிய பொருளை விவரிக்க வரும் உரைகாரரான வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யார் சினம் மூண்ட வீரர் எனப் பொருள் கொள்ளுவது குறிக்கத்தக்கது. பாடலின் முழுவதையும் மள்ளரின் வீரங்குறித்து எழுவதால் அதனை அவ்வண்ணமே காணுதல் நல்லது.

"தந்தங்களோடு மதம் பொருந்திய கொடிய கார்போன்ற யானைகளிலிருந்து பெருகுகின்ற குருதியினாலியன்ற கடல் நின்றனவற்றைக் கடக்க முடியாதெனவாய் (மற்றுமுள்ள) தேர்களும் அழிக்கவல்ல யானைகளும் பொருகின்ற சினம் மூண்ட வீரரும் குதிரைக் கூட்டம் எல்லாமும், வலிய கொடிய போரினிடத்துப் புரள்வனவாய், பேர்ந்து செல்லுந் திசையைப் பெறாவாயின. (எ-று) - பணையின் மதம் பிணை வெங்கார் என்க. அதிகாயனுடைய சதுரங்க சேனைகள் அவனது தனிப்பட்ட யானைச் சேனைகளின் இரத்தக் கடலைக் கடக்க முடியாது அப்போர்க் களத்து அவ்விரத்தக் கடற் பெருக்கிற்றானே யுகள்வனவாயின்"[23].

மிகவும் அருமையாகப் போர் புரியும் வித்தையைக் கொண்ட மறவரின் திறப்பாட்டை இவ்வுரை சுட்டுகிறது. மள்ளர் எதற்கும் கலங்காமல போர்க் களத்தில் செயலாற்றிய அருமைப்பாட்டை இராமகாதையின் ஆசிரியர் கூறுவது எண்ணுதற்குரியது. வாய்ப்பு வருமிடங்களில் எல்லாம் வீரருக்கான மாற்றுச் சொல்லாகக் கம்பன் மள்ளர் என்ற சொல்லையே கையாண்டிருக்கிறான் என்பதை மேலுமொரு சான்றால் விளக்கலாம்.

"மள்ளர்கள் மறுபடைமான யானைமேல்
வெள்ளிவேல் எறிவனபோன்ற மேகங்கள்
தள்ள அருந்துளிபடி தகர்ந்து சாய்கிரி
புள்ளி வெங்கடகரி புரள்வ போன்றவே"

என்ற பாடல் கிட்கிந்தைக் காண்டத்தில் கார்காண படலத்தில் இடம்

பெறுகின்றது. இப்பாடலுள் வேளாண் தொழிலுக்கான குறிப்பேதுமில்லை. மாறாக உவமைகளை இறக்குமதி செய்துள்ள இப்பாடலில் போர்வீரரின் திறம் உணர்த்தப் பெறுகின்றது. உ.வே.சா. பதிப்பின் '452ம் பக்கத்து உரையில் மள்ளர் என்பதற்கு வீரர்கள் எனத் தெளிவுபட உரை எழுதப்பெற்றுள்ளது. மேகங்களுடன் ஒப்பிடப் பெற்ற நிலையில் போர் மறவரின் ஆற்றல் பேசப் பெறுகின்றது. இதற்கு அரண் சேர்க்கும் வகையில் பூவண்ணனின் உரை பின்வருமாறு அமைகின்றது.

"மலையில் உள்ள கரிய பெரிய கற்களின் மேல் மழைத்துளிகளைச் சொரியும் மேகங்கள், பகைவர் படையை எதிர்த்துப் போர் செய்யவல்ல படைகள் யானைகளின் மீதும் வெண்மையான வேல்களை எறிவன போல் விளங்கின. அம்மேகங்களின் இடிகள் விசையுடனே விழுவதால் பிளந்து விழும் கற்கள் செம்புள்ளிகளையும் செவ்விய மதத்தையுமுடைய யானைகள் அந்த வேல்கள் படுவதால் புரண்டு விழுவன போன்றன"

கம்பனின் காப்பியத்தில் வீரர்களின் பங்களிப்பு ஒரு சார்பாகத் தோன்றும் எனலாம். ஏனெனில் இராம இலக்குவர்களின் பக்கம் தவிர எஞ்சிய பக்கம் குரக்கினத்தார் போரிட்டனர். அல்லது அரக்கரினத்தார் போர் புரிந்தனர். எனவே ஒரு மருங்கைப் புகழ்வதாகப் போய்விடும் என்ற கருத்து கம்பனுக்கு இருந்திருக்க வேண்டும். அதனாலேதான் உழவர்களை மள்ளர் என்ற சொல் கொண்டு புனைந்தது போல வீரர்களை அச்சொல்லால் மிகுதியும் புகழவில்லை எனக் கருதுவது பிழையாகாது.

ஆயினும் மானுடராகிய மள்ளரின் போர்முறை நாகரிகமுடையதாக, அறவழியில் நிற்பதாகக் கம்பன் காட்டுவது குறித்தற்குரியது. குரங்குகளிடம் காணப்பெற்ற போர் ஒழுங்கு கூட இலங்கையரக்கர்களிடமில்லை எனபதுதான் கம்பனின் பெருங்கவலை. அரக்கர்களின் மாயப் போரை மறுதலிக்கிறான் இராமனாகிய வீரன். முறையற்ற வழியில் போர்புரிய மறுக்கின்றனர் மானிடராகிய இராம இலக்குவன் பகுதி வீரர் பெருமக்கள். இதனை ஆழ்ந்து நோக்கின் வீரர்களின் மாண்பும் புகழும் முறைமையும் இன்னபிறவும் முழுமையாகப் புலப்படும். அறப்போர் யார் வசமென்பது தெரிந்துவிடின் அப்போருக்குரியாரைப் போற்றுவதும் இயல்பாய் எழும். ஏனெனில் 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்பது காவியத்தின் பாவிகம். அறப்போர் என்றால் என்ன என்பதற்கொரு சான்றாகக் கீழ்க்காணும் சொற்களைக் கண்ணுறலாம்.

"என்னதான் சேனைபலமும், பொருட்பலமும் இருந்த போதிலும் போரிடுவதற்கு முன் பின்பற்ற வேண்டிய முறைகளைக் கடைப்பிடிக்க

வேண்டுமல்லவா? ஆதலால் சிறந்த ஒருவரை, இராவணனிடம் தூதாக அனுப்ப வேண்டும் என்ற கருத்து மகிழ்த்தது. இக்கருத்தை, மற்றவர்களோடு ஆலோசனை செய்த பின்னரே நிறைவேற்ற வேண்டும் என்று இராமன் எண்ணினான். தூது அனுப்பும் செய்தியை முதலில் வீபிடணனிடம் தெரிவித்தான். மேலும், சீதையை சிறையினின்று விடுவிக்க வேண்டும், அப்படி இராவணன் செய்யானெனின் அவனுடன் போரிடுதல் முறையாகும் எனவும் இராமன் கூறினான்.

இதைக் கேட்ட விபீடணன், இராவணனோ, சீதையைப் பூமியொடும் எடுத்துச் சென்ற மாபாவி. எதிர்த்த சடாயுவையுங் கொன்றான். தூதுவனாக அனுப்பப்பட்ட அனுமனுக்கு இன்னல் விளைவித்தான். எத்தனையோ முறை அறிவுறுத்தியும் இரக்கமற்ற அரக்கனான இராவணன் ஒன்றன் மேல் ஒன்றாகக் கேடுகள பல புரிந்து வருகின்றான். அப்படிப்பட்டவனைக் கொல்லாமல் இன்னொரு முறை தூது அனுப்ப வேண்டுமா? எனக் கேட்டான். இராவணன் பல குற்றங்கள் புரிந்திருந்த போதிலும் மீண்டும் ஒருமுறை அவனிடம் தூதனுப்பல் அறத்தின் பாற்பட்டதாகும் என கருணாமூர்த்தியாகிய இராமன் கூறினான.

'நிறையுடைமை நீங்காமை வேண்டின் - பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும்

என வள்ளுவர் வழுத்துலைக் காணலாம். முழு மனிதனாய் நிறை குணமுடையவனாய்த் திகழ்வதற்குப் பொறுமை வேண்டும். அதனுடன் கருணை நிலைக்களனாய் அமைதல் வேண்டும்" [25].

இவை போன்ற சான்றுகளால் மள்ளாகளாகிய வீரர்கள் மாயம் நிறைந்த போரில் ஈடுபடுதலில்லை என்பது போன்ற நெறிகளை முறைப்படியாகப் பேணுபவர்கள் ஆதலினால் போர் அறங்களைக் காத்துநின்ற மெய்ம்மை உணர்த்தப்பெறும்.

மூன்று வெவ்வேறு வகையான இனங்களை முன்நிறுத்தி மானுடராய மள்ளர்களே அறம் நிறைந்த போராளிகள் என்பதைக் கம்பன் பரவலாகப் பேசுவான். தமிழின் அறநூல்கள் காட்டிய வழியில் தம் பாட்டை எழுதும் கம்பனின் பாடல் வரிகளை நன்கு கற்ற பின்னர் மளளரின மதிக் கூர்மையை எண்ணி வியக்கும் வேலாயுதனார் கீழ்க் கண்டாங்கு வரைகுவார் :

"சுக்ரீவன், விபீடணன், இலக்குவன் ஆகியோர் வீற்றிருந்த அச்சபையில் இராமன் சொன்ன அறநெறியை மிகுந்த அமைதியுடன் எல்லோரும் கேட்டனர். பின், இராமன் வாலியின மகனான அங்கதனைத

தூது அனுப்பலாம் எனக் கூறினான். அநுமனை மீண்டும் தூது அனுப்பலாமெனினும், இராவணனிடமிருப்போர் அநுமனையன்றி வேறொருவரும் இலையோ எனும் ஐயத்தை நீக்குவதற்கே அங்கதனைத் தூதுவிட வேண்டிய திருக்கிறது எனக் கூறினான் இராமன். இதைக் கேட்ட அனைவரும் அங்கதனையே தூதுவிட ஒப்புக் கொண்டனர். இவ்வாறாக, ஆலாசனைக் குழுவினர் ஒப்புக் கொண்டபின்பே, அக்குழுவினர்க்கும் எல்லா உயிர்க்கும் தலைவனான இராமன் அங்கதனைத் தூதுபோக அழைத்தான். பின் அவனிடம் இராமன் சொன்னதைக் கம்பர் பெருமான் நன்றாக எடுத்துக் காட்டுகிறார்.

. . . . . நம்பி நீ நண்ணலார்பாற் சென்றுள
துணரவொன்று செப்பினை திரிதி என்றான்,

எனக் குறிப்பிடுகிறார்" [26].

"பரந்துள்ள நாட்டில் நீதி அல்லது நேர்மையின் நிலையைக் கண்ட சாக்ரடீஸ் . . . . மனித இயல்பில் மூவகைப் பகுதிகள் இருப்பதாக . . . கூறுவார். முதலில் விளங்குவது அறிவுப் பகுதி (Rational part) ... இதன் முக்கியப் பண்புதான் அனுபவ அறிவு. அடுத்து வரும் 'ஆர்வப் பகுதியை' (Spiritual Part) நாம் சாதாரணமாகத் 'திறம்' அல்லது 'ஆற்றல்' என்போம். . . . மனிதன் உயர்ச்சிகளையும் விருப்பங்களையும் கட்டுப்படுத்துவது இதன் தொழிலாகும். மூன்றாவது பகுதியான 'உணர்ச்சிகளின் விருப்பப் பகுதி' (Appetitive Part) அல்லது நாட்டம் மனவியல் பின்பெரும் பகுதியைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது. நம் விருப்பங்களும் ஆசைகளும் இங்கு இடம் பெறுகின்றன. இதை 'உள்ளுக்கம்' (Instinots) எனவும் கொள்ளலாம்". அறவியலை விளக்கும்போது நல்லொழுக்கங்களைச் சுட்டுகின்ற பகுதியில் இவ்வுரை இடம் பெறுகிறது. உள்ளுக்கம் அறத்தை அணைத்துவரின் வெற்றி தாமாகவே கணிந்துவரும். எதிர்மறையாயின் அழிவு சொல்லாமலேயே முன்வந்து நிற்கும். இவற்றைக் கம்பரும் தம் காப்பியத்தில் இராமனின் போர் நெறி அறத்தொடு நிற்றலாகவும், இராவணனின் போர்முறை அறமின்றித் தோன்றுவதாகவும் சுட்டிக் காட்டுவது இத்தருணத்தில் கருதுவதற்குரியது".

மாயப்போர் புரிதல் போர் அறமா என வினவுவார் உண்டு. இராமன் தரப்பில இத்தகு முறைமை இல்லையாதலின் அஃதே அறமென்று ஆயிற்று.

நிறப்பெரும் படைக்கலம் நிறத்தின் நேர்உற
மறப்பயன் விளைக்குறும் வன்மை, அன்றிஅரோ
இறப்பினும் திருஎலாம் இழப்பஎய்தினும்
துறப்பலர் அறம் எனின் சூரர் ஆவதே

எனத் தைலமாட்டுப் படலத்தில் (29) கம்பன் வெள்ளிடைமலை என வெளிப்படுத்துகிறான தன் கருத்தை.

கம்பன் இருவகை வீ ரர்களைப் புலப்படுத்துவான். காவியத்தில் மேலோங்கும் அளவுகோல் அறவழிப்பட்ட வீ ரமே.

இறப்பினும், திருவெலாம் இழப்ப எய்தினும்
துறப்பவர் அறம் எனல் சூரர் ஆவதே (II 5, 29)

என்று சமந்திரனிடமும்,

அறத்தி னாலன்றி அமரர்க்கும்
அருஞ்சமம் கடத்தல்
மறத்தினால் அரிது என்பது
மனத்திடை வலித்தி (VI, 14, 251)

என்று இராவணனிடமும் இராமன் கூறுவதே அடிப்படைக் கோட்பாடு ஆகும். ஆனால் தசமுகம் தன்னை வெளவிவந்து சிறைவைத்துப் பெண்டாளத் துடிப்பது அறங்கடந்த செயல் என்று சாடுவதோடு அமையாள் சீதை; அவனைக் கோழை என்றும் கடிவாள்;

அஞ்சினை ஆதலால் அன்று
ஆண்தகை அற்றம் நோக்கி
வஞ்சினை மான்ஒன்று ஏவி
மாயையால் மறைத்து வைத்தாய் (VI, 3,118)

தமையன் பிறன்மனை நயந்து சிறைவைத்த செயலைப்பற்றி பேசும் கும்பகருணனும், பாவியர் உறும்பழி இதின்பழியும் உண்டோ? (VI. 2,49) என்று அறநோக்கில் கண்டிப்பதோடு மானம் பேசுவோா மானிடரைக் கூசுவதையும் கடிகின்றான். (VI, 3,52)

போர்ச் சூழலில் எவ்விடத்தும் அறத்திற்குப் புறம்பான செயல்களில் இறங்குவதும், மாயப்போர் புரிவதும் அறமாகா என்பதனையே இராவண - இராமப்போர் சுட்டுகிறது. "சீதையை மீட்பதுவே நம் கடன்" எனக் கருதும் இராமன் இராவணனைக் கொல்வது பாவந்தோற்கும் என்பதனை நிலைநாட்டவும் அறம் கூற்றாய் வரும் என்பதை நிரூபிக்கவுமே" [27].

மேற்செய்திகளால் மள்ளர்கள் சரியான வழிமுறைகளைப் பின்பற்றி மட்டுமே மாண்புடன் போர் புரிந்தனர் என்பது தெளிவுபடுகிறது.

இதுகாறும் கண்ட செய்திகளால் பெறப்படும் சில செய்திகள் :

1. கம்பன், மள்ளர் என்ற சொல்லை வீரர்க்குரிய மாற்றுச் சொல்லாகப் பயன்படுத்தியுள்ளான்.

2. உழவர், வீரர் இருவரையும் வேறுபடுத்திக் காணுதற்கியலாதவனைப் போல மறக்களத்தை மருதம் நிலம்போலச் சித்திரிக்கின்றான்.

3. மள்ளர்களாகிய வீரர்கள் போராற்றல் கொண்டு, தத்தம் படையின் வெற்றிக்கு முழுமையான ஈடுபாட்டுடன் போரிடுகின்றனர்.

4. மழைபோலக் கணைகள் வரினும் கலங்காமல் திறமைகளை வெளிக்காட்டிய வண்ணம் போர்ச் செயல்களில் முறைமையாக மள்ளர்கள் இயங்குகின்றனர்.

5. அறமற்ற வழியிலான போரை மள்ளர்கள் விரும்பியதில்லை. தூதனுப்புதல் சரியான முறைமை என்பதை வீரனாகிய இராமன் சுட்டுகின்றான்.

6. எதிரியிடம் படைக்கருவி இல்லையெனில் அவனை அழிக்கலாகாது (அப்பகைவன் அரக்கனாயினும் கூட) என்ற போரறம் வீரத்தின் மாண்பைச் சுட்டுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. கம்பராமாயணம், பாலகாண்டம், உ.வே.சா. உரை, ப. 34
2. மேலது, ப. 34
3. மேலது.,
4. மேலது., ப. 44
5. மேலது.,
6. மேலது.,
7. மேலது., ப. 47
8. மேலது., ப. 56
9. மேலது.,
10. மேலது., ப. 59 - 60
11. மேலது., ப. 87

12. மேலது., ப. 465

13. மேலது., ப. 496 - 497

14. மேலது., ப. 89

15. புறநானூறு, உ.வே.சா. உரை, ப. 574

16. மேலது., ப. 581

17. நா. செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, பக். 305 - 306.

18. சி. சுந்தராம்பாள், 'காப்பியம் காட்டும் மள்ளர் மரபினர்', தமிழர் பண்பாட்டு வரலாறு, ப. 60 - 61 - 1996.

19. கைலாசபதி, 'பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்', ப. 31 - 32.

20. மேலது., ப. 30 - 31

21. மு.த. வேலாயுதனார், 'சொற்கடவாதத் தூதன்', கம்பன் விழா மலர் (1973), புதுவைக் கம்பன் கழகம், ப. 54.

22. கம்பராமாயணம், யுத்த காண்டம், வை.மு.கோ. உரை, ப. 561.

23. மேலது., ப. 748.

24. கம்பராமாயணம், கிட்கிந்தாகாண்டம், பூவண்ணன் உரை, ப. 233

25. மு.த. வேலாயுதனார், 'சொற்கடவாத் தூதன்' கம்பன் விழா மலர் (1973), புதுவைக் கம்பன் கழகம், ப. 55

26. மேலது.,

27. அ. அறிவுநம்பி, கம்பரின் அறிவியல், ப. 166.

## இயல் - 4

# மள்ளரின் வாழ்வியல் செய்திகள்

பனனெடுங் காலந்தொட்டே மள்ளர் என்ற சொல்லாட்சி இலக்கியங்களில் பரவலாகக் காணப்பெறுகின்றது. வேளாண் மக்களாகவும், போர்வீரர்களாகவும் அமைந்திருந்த மள்ளர்களின் செயல்பாடுகளையும், அருமை பெருமைகளையும் தமிழியக்கியங்கள் பலபடப் பேசுகின்றன. ஆயினும் மள்ளர்களின் அக, புற வாழ்வியல் செய்திகள் இன்னும் விரிவானவை. அவர்களின் வரலாற்றுப் பக்கங்கள் மனங்கொள்ளத்தக்க செய்திகள் பலவற்றைக் கொண்டிருக்கின்றன. மள்ளர்களைப் பற்றிய செய்திகள் வருமிடங்களில் இலைமறை காயாகவும், மறைமுகமாகவும், குறிப்புப் பொருளாகவும் காணப்படும் கூறுகளை விளக்கமுறக் காணுவது மள்ளர் மாண்புகளை மேலும் துலக்கமுற அறிதற்கு வாய்ப்பு நல்கும். அதற்கான முயல்வுகள் இப்பகுதியில் பேசப்பெறுகின்றன. தடைவிடைகளை எழுப்பிக் கொண்டும், தரவுகளைத் திரட்டிக் கொண்டும் இந்தப் பகுதியில் சிந்தனைகள் பலவற்றை மறுபார்வைக்கு உட்படுத்துதல் வேண்டியதாயுள்ளது. தொல்காப்பியம், சங்க இலக்கியம் போன்ற பழங்கால நூல்கள் ஒரு புறமும், வடமொழிக் காப்பியத்தைத் தமிழில் ஆக்கிய கம்பனின் நூல் மறுபுறமும், மள்ளர்கள் பற்றிய சிற்றிலக்கியங்கள் பிறிதொரு புறமுமாக ஏராளமான நூற்செய்திகளுக்குள் நுழைந்து வர வேண்டியுள்ளது. தீர்வுகளை நோக்கிய அல்லது வரலாற்று வேர்களை இனங்கண்டு உணர வேண்டிய சூழலில் பல்வேறு தரவுகள் மீள்பார்வைக்கு இலக்காகியே தீரும். அவ்வகையில் மள்ளர்களின் செயல்பாடுகள், காலந்தோறும் அவர்கள் பெற்ற மாற்றங்கள், சமூகத்தில் அவர்களுக்கான இடம், அரசியல், சமூக, பொருளாதார நிலைகளில் அவர்கள் பெற்றிருந்த மதிப்பு, இன்னபிறவற்றைக் காணுதல் தேவையாகிறது. கம்பரின் கோடி காட்டலுக்குப் பின்புறத்தில் காணப்படும் தரவுகள் வேறு செய்திகளையும் நமக்குத் தரும் வாய்ப்புகள் உள்ளன.

கம்பன் காட்டும் மள்ளர்களாகிய வேளாண் பெருமக்களின் மகிழ்ச்சி, பண்பு, பணிகள் முன்னியலில் விரிவாகப் பேசப்பெற்றன. மிகச் சரியான நேரத்தில் மிகச சரியான முறையில் மிகச் சரியான பணிகளை அவர்கள் செய்துள்ளனர். அப்பணியில் இடையூறுவரின் என்னவாகும் என்பதைப் புலப்படுத்துவாரைப் போலக் கம்பன் தரும் கூடுதல் செய்தி வருமாறு :

அயோத்தியா காண்டத்தில் பள்ளிப்படைப் படலத்தில் மள்ளர் என்பதற்கு பதிலாக 'மல்லர்' என்ற சொல் வீரரைக் குறிக்க வந்துள்ளது.

'ஏறு கொண்டேழு மல்லரிடிப்பினை' (பாடல் 17) என்ற வரிக்குப் பொருளாகக் காளை போன்று வீரகுணத்தோடு புறப்படுகின்ற மல்லர் என விளக்கம் தரப்பெறுகின்றது. வீரர் என்பதற்கு மள்ளர் என்ற சொல் மட்டுமின்றி மல்லர் என்ற சொல்லும் வழங்கப்பெற்றுள்ளது. 'மல்லாண்ட' என்ற பெயரில் அமையும் இற்றைநாள் விழாவுடன் இச்சொல்லை உரசிப் பார்க்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றோம். அதனைப் போன்றே வேளாண் பணிகள் பற்றிய கூடுதல் செய்தியாகப் பாடல் 21 இல் சில காணப்பெறுகின்றன.

ஏய்ந்த காலமிது இதற் காலமென
ஆய்ந்து மள்ளர் அரிகுநரின்மையால்
பாய்ந்த சூதப்பசுநறுந் தேறலால்
சாய்ந்தொசிந்து முளைத்தன சாலியே

இப்பாடலுக்கான சொற்பொருள் விளக்கம் வருமாறு : 'இப்பயிரை அறுப்பதற்குப் பக்குவமான காலம் இதுவாகுமென்று, ஆராய்ந்து, அரிகின்றவராகிய பயிர்த் தொழிலாளர் இல்லாமையால், செந்நெற்பயிர்கள் (கனியைப் பறிப்பாற் இன்மையாற் சிந்தியழிந்த அவற்றிலிருந்து) பாய்நத மாம்பழத்தின் புதிய இனிய சாற்றினால் தலை சாய்ந்து அடிமுறிந்து (தாமீன்ற தானியங்கள் பூமியிற் சிந்தி) முளைக்கப் பெற்றன'. கற்பனை கலந்திருப்பதைப் போலத் தோன்றினும் இப்பாடலில் உறையும் முக்கியக் கருத்தாவது : உரிய நேரம் இதுவென்று ஆராய்வதும், ஆய்ந்து கண்ட முடிவுக்கிணங்கச் செயல்படுவதும் பயிர்த் தொழிலாளரின் பணிகளாகும்.

இவ்வாறு வேளாண் மக்களின் பணிகளை முறைப்படுத்திக் காட்டும் கம்பன் அவர்தம் வாழ்வியலைத் தனித்த நிலையில் தம் காப்பியத்தில் கூறினாரில்லை. அவ்வாறு பாடுதல் அவருக்கு நோக்கமாக இருந்திருக்க வாய்ப்பில்லை. அவனால் எழுதப் பெற்றதாகக் கருதப்பெறும் 'ஏரெழுபது' குறிக்கத் தக்க நூல்தான். எனினும் அக்கம்பன் வேறொருவன் என்ற கருத்தும், காப்பியம் பாடிய பாவலன் சிறுநூல் யாத்திருக்க வேண்டிய சூழல் பற்றியவை பொருநதுவதாயில்லை என்ற கருததும் கவனிக்கத் தக்கன. தமிழில் காப்பியங்கள் புனைந்த இளங்கோவடிகள், கம்பன் இருவருக்கும் பெருத்த வேறுபாடுண்டு. இளஙகோ முலலை நில மக்களைப் பாடும் பொழுதில் 'குரவை பாடினர்' என்று போகிற போக்கில் கூறிவிட்டுச் செல்லவில்லை. மாறாக அக்குரவைப் பாடல்களையும் பரபபி, அதன் உள்ளடக்கம், இசைமை, பாட்டுடைத் த[illegible] போனற பல்வகைச் செய்திகளையும் தருகின்றார். உழததியர் பாடு[illegible]ரெனவும், வேளா[illegible]

மக்கள் கூத்தாடினர் எனவும் பேசும் கம்பன் அவர்கள் பாடிய பாடல்களைத் தரவில்லை. பெருங்காப்பியத்தில் அவ்வாறு தருவதற்கு அவன் அணியமாகவில்லை. இரண்டாவதாகச் சிலம்பைப் போலத் தமிழகத்தை மட்டும் நிலைக்களனாகக் கொள்ளாமல் பரந்த நிலையில் தன் பரப்பை இராமாகாதை கொண்டதும் ஒரு காரணமாகலாம்.

'வருவித்துக் கொள்ளல்' என்ற உத்தியால் பழம் பாடலுக்கான எழுவாயும் இன்ன பிறவும் கொணரப் பெறுவது போல உழத்தியரின் பாட்டொலி, பயிராளர்களின் கூத்து, இனனபிறவற்றை வருவித்துக் கொண்டு, கம்பனின் பாடல்களில் பொருத்திக் காண வேண்டியுள்ளது. மருத நில மக்கள் ஏத்திப் பரவிய கடவுள் தொல்காப்பியர் காலந்தொட்டு வழக்கில் இருந்துவந்த கடவுளாகத்தான் இருக்க முடியும். ஏனெனில் கம்பன் தனி காப்பியத்தில் உலவவிட்ட வேளாண் மக்கள் 'பொன்னி' நதிதீரத்து ஆட்கள். தமிழகத்தின் பண்டை இலக்கியங்கள், இலக்கியங்கள் கூறும் தெய்வங்கள், ஆடல் முறைகள், சடங்குகள் ஆகியவை கம்பராமாயண மள்ளர்களிடம் காணப்பெற்றதாகக் கருதுவதே சரியானது.

மள்ளர்கள் உலகத்தில் தலைசிறந்த பணியினை மேற்கொண்டவர்கள். வேறு எந்தத் தொழிலுக்கும் தனித்த அதிகாரம் வரையாத திருவள்ளுவர் 'உழவு' எனத் தனித்தெழுதுவது உற்று நோக்கத்தக்கது. பின்வந்த பாட்டுக்கொரு புலவனும் 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' எனத் தனித்தெடுத்து உழவை முன்னிறுத்தவும் முதன்மைப்படுத்தவும் காணலாம். பிற அரசர்களையும் தன் கீழ் கொணரும் ஆற்றல் நிறைந்தவர்கள் மள்ளர்கள் என்பதைக் குறளொன்றிற்கான உரைகள் தெளிவுபடுத்தும் சான்றுக்கு ஒரு பகுதி :

பலகுடை நீழலுந் தங்குடைக் கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர் (1034)

## பரிமேலழகர் உரை

உழுதல் தொழிலான் நெல்லினை உடையராய தண்ணளியுடையோர், பல வேந்தர் குடை நிழலதாய மண் முழுதினையும் தம் அரசன் குடைக் கீழே காண்பர்.

அலகு - கதிர் : அஃது ஈண்டு ஆகுபெயராய் நெல் மேலதாயிற்று. 'குடை நீழல்' என்பதூஉம் ஆகுபெயர். 'ஊன்றுசான் மருங்கின் ஈன்றதன் பயனே' என்றதனால் தம் அரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண் முழுதும் அவனதாகக கண்டிருப்பர் என்றதாம். 'இரப்போர் சுற்றமும் புரப்போர்

கொற்றமும் உழவிடை விளைப்போர்' என்றார் பிறரும்.

## காளிங்கர் உரை

கொற்றக்குடை முதல் ஆகிய அளவு இறந்த குடை நிழற்கீழ் வாழ்வோரையும் அவர் அவர்க்கு தாம் கொடுக்கும் கொடை வழி வருதலை நாளும் நாளும் கொண்டு ஒழுகுபவர். இவ்வுலகு இயல்பு உடையார் யார் எனின், தமக்கு உழவைத் தரும் கலப்பைத் தண்ணிழலினை உடையவர் எ-று.

அலகு என்பது கலப்பை 'தம் கொடைக்கீழ்' என்பது இவர் பாடம்.

## வெ. இராமலிங்கம் உரை

தானியக் கதிரின் நிழலில் இருப்பவர் மற்றப் பலவிதமான குடை நிழலில் இருப்பவர்களையும் தம்முடைய குடையின் நிழலைத் தேடி வரச் செய்யக் கூடியவர்கள்.

குடை - ஆட்சி, நீழல் - செல்வம். உழவுத் தொழில் செய்கின்றவர்கள் மற்றுள்ள பல தொழில்களைச் செய்கின்ற எல்லாரையும் தம்முடைய ஆதரவைத் தேடி வரச் செய்கிறவர்கள் என்பது கருத்து.

## முடிவுநிலை

'அலகு' என்பதற்குக் கலப்பை என்று காளிங்கரும் 'நீழல்' என்பதற்குத் தண்ணளி என்று பரிமேலழகரும் கூறும் பொருள்கள் சிறப்பில. பலகுடை, அலகுடை என்ற யாப்பு நடை நோக்கின், 'தங்குடை' என அமைவதே இனிமை பயக்கும் ஆதலின், தங்கொடை எனும் காளிங்கர் பாடம் சிறவாது. அலகுடை நீழல் என்ற தொடர்க்குத் தானியக் கதிரின் நிழல் என்னும் இராமலிங்கம் பிள்ளை உரை சிறப்பினது. பலகுடை என்பதற்குப் பல தொழிலைச் செய்வார் என்று இராமலிங்கம் பிள்ளை உரைப்பது மரபன்மையின், பொருந்தாது. மாற்றரசர்களையும் தம்மரசனுக்குப் பணிய வைக்கும் சிறப்பு உழவினால் உண்டாம் எனும் பரிமேலழகர் கருத்தே வலிவுடையது. 'ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே' (புறம 35). 'இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும் உழவிடை விளைப்போர்' (சிலம்பு, நாடு காண்காதை 149, 150) எனத் தம உரைக்குச் சான்றாகப் பரிமேலழகர் காட்டும் மேற்கோள்கள் நினையத்தகும்"[1]

இவவாறு பல்வேறு தொழில்களுக்கிடையில் உழவு மட்டும் பிரித்தெடுக்கப்பெற வேண்டிய அளவு அருமை பெருமைகளை

கொண்டுள்ளதைப் பன்னெடுங்காலமாக இலக்கியங்கள் பகர்ந்து வருகின்றன.

இத்தகு உழவர் பெருமக்கள் தம் மனமகிழ்வை ஆடியும் பாடியும் நிகழ்த்தினரென்பதைக் கம்பன் தொட்டுக் காட்டிவிட்டுச் சென்றுள்ளான். அவர்கள் யாரை அல்லது எதனை முன் வைத்துப் பாடினர், ஆடினர் என்பதற்கான சான்றுகள் அவனால் தரப்பெறவில்லை. எனினும் அவனுக்கு முனபிருந்த இலக்கியங்கள் இலக்கணங்கள கூறும் செய்திகளை நிரல்படுத்திப் பார்த்தால் கமபன் கால வேளாண் மக்களின் வாழ்வியற் கூறுகளை உணரவியலும். தொல்காப்பியம தமிழரின தொன்மை இலக்கண நூல். மருதநிலத் தெய்வமாக அந்நூல் வேந்தனைக் குறிக்கும். உரைகாரர்கள் அத்தனைபேரும் வேந்தன் என்பது இந்திரன் எனக் கூறியுள்ளனர். இந்திரன் என்பவன் தமிழக எல்லைக்குள் காணப்பட்ட நிலத்தெய்வம் என ஒரு பிரிவினரும், தேவாகளின் அதிபதி என மற்றொரு பிரிவினரும் கூறுகின்றனர். இந்திரன், இந்திரன் விழா பற்றிய செயதிகளைத் தொகுத்தும் வகுத்தும் பார்க்க வேண்டிய சூழலில் இருக்கின்றோம். சங்க காலத்திலேயே இந்திரன் தனித்த கடவுளராகப் போற்றப் பெற்றமையைச் சான்றுகள் சில தந்து விளக்குகின்றார் மு.சண்முகம்பிள்ளை. அவர் கட்டுரையின் விழுமிய செய்திகள் வருமாறு:

"உலகின எட்டுத் திக்கினும் நின்று காவல் தொழில் புரியும் திக்குப் பாலர்களைப் பரிபாடலின் எட்டாம் பாட்டு, 'நன்திசை காப்போர்' என்று (பரி. 8 : 7) குறிப்பிடுகிறது இவர்களாவார் : இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்போராவர்".

"அந்நாளில் பேரூர்களிலே இந்திரனுக்கு விழாக் கொண்டாடி வந்தனர். இது 'இந்திர விழா' என வழங்கப்பட்டது. இவ்விழாவில் பூக்களை மிகுதியாகப் பயன்படுத்தி வந்தனர் எனபது,

'இந்திர விழவிற் பூவின் அன்ன
புன் தலைப் பேடை வரிநிழல் அகவும்' (ஐங். 62 : 1-2)

எனவரும ஐங்குறுநூற்றுப் பாடற் பகுதியால் புலனாகும். பதிற்றுப்பத்து இதனைப் 'பல பூ விழவு' (பதிற் : 30 : 15) என்று சுட்டுகிறது. பழனம் சூழ்ந்த ஊர்களிலே நிகழும் இந்தப் பல பூ விழாவாகிய இந்திர விழாவைக் கண்டுகளிக்க, மக்கள் திரண்டு செல்வதையும் பதிற்றுப்பத்து சுட்டுகிறது (30 : 14-21). பதிற்றுப் பத்தும், ஐங்குறுநூற்றுப் பாடலும் மருத நிலத்தார் பேரூர்களிலே கொண்டாடிய விழாவாகவே இநதிர விழாவைச் சுட்டியுள்ளன. இது கொண்டு இந்திரன்

மருத வைப்புகள் சூழ்ந்த நாட்டின் சிறப்புத் தெய்வம் என்பது பெறப்படும். சிலப்பதிகாரத்திலே, 'இந்திர விழவூர் எடுத்த காதை' யில் புகார் நகரில் நடைபெற்ற இந்திர விழா பற்றிய செய்திகளை விரிவாக இளங்கோவடிகள் பாடியுள்ளமையும் ஈண்டுக் கருதத்தக்கது".

"இந்திரன் வானுலகைத் தேவர்களின் அதிபதி, 'துறக்கத்து அமரர் செல்வன்" (பரி. 5:69), 'அமரர் செல்வன்' (பரி.5 :51), 'வானத்து வளம் கெழு செல்வன்' (பரி. 5:59), 'அருநிலை உயர் தெய்வத்து அணங்கு' (பரி. 9 : 12) 'விண்ணோர் வேள்வி முதல்வன்' (பரி.5:30) என்று சிறப்பிக்கப்படுகின்றான். இவன் வடபால் உயர்ந்தோங்கியுள்ள பெருமலையைக் காவல் புரிபவன் (பரி. 9:1-3). நூறு வேள்விகளைப் புரிந்தவன். அதனால் விளைந்த பகைவரைவென்று கொல்லும் வெற்றி படைத்தவன். (முருகு. 155-156). ஆயிரம் கண்களையுடையவன் (முருகு.155, கலி 105 : 15, பரி, 9:9).

பகைவர்களை வருததும் இயல்புடைய வச்சிராயுதத்தைக் கையில் ஏந்தியவன் (புறம் : 241 : 3, பரி. 18 :30, கலி. 105 : 15). 'நெடியோன்' என்றும் இவன் குறிக்கப்படுகிறான் (புறம் 241 : 3). நான்கு கொம்புகள் படைத்த யானையின் பிடரியில் ஏறி நடத்துபவன்.

நூற்றுப் பத்து அடுக்கிய நாட்டத்து, நூறு பல்
வேள்வி முற்றிய வென்ற அடு கொற்றத்து
ஈர் - இரண்டு ஏந்திய மருப்பின் எழில் நடை,
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளார் செல்வனும் (முருகு - 155-159)

இவன் சுவர்க்கலோகத்திற்கு அதிபதியாதலின் வீரசுவர்க்கம் புகும் வீரர்கள் இவனது வானுலகிற்கு வருவர். சுவர்க்க உலகிற்கு வருவாரை இந்திரன் பிற தேவர்களுடன் சென்று எதிர் கொள்வான் என்பது ஒரு நம்பிக்கை. ஆய் வள்ளல் இறந்த போது, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடிய கையறுநிலைப் பாடலில் கற்பனையாக, இரவலரைப் புரந்த ஆயை எதிர்கொள்ள இந்திரன் கோயில் முரசும் வானத்தின் கண் ஒலிக்கின்றது என்று மொழிகின்றார். (புறம் 241:1-5)

இந்திரனும் பிற தேவர்களும் அமுதை உட்கொள்ளுபவர். ஆகவே அவர்கள் அருந்தும் அமுது, 'இந்திரர் அமிழ்தம்' (புறம் 182:1-2) என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தேவ மைந்தரும் மகளிரும் புடைசூழ ஆகாய கங்கையில் இவன் நீராட்டயர்வான். பாண்டிய மன்னன் கூடல்வாழ் மாந்தருடன் வையையில் நீராடிய காட்சியை இந்திரன் நிகழ்த்தும் நீராட்டத்துடன் ஒப்பிட்டுப் பேசுகின்றார் ஒரு புலவர் :

வெருவரு கொல்யானை வீங்குதோள் மாறன்
உருகெழு கூடலவரோடு, வையை
வருபுனல் ஆடிய தன்மை பொருவுங்கால்
இருமுந்நீர் வையம் படித்து என்னை? யான் ஊர்க்கு
ஒரு நிலையும் ஆற்ற இயையா! அருமரபின்
அந்தர வான் யாற்று, ஆயிரம் கண்ணினான்
இந்திரன் ஆடும் தகைத்து (பரிபாடல் திரட்டு 2: 91-97)

வானத்தின் கண் மழைக்காலத்தில் தோன்றும் பல வண்ணமுடைய வானவில்லை 'இந்திரவில்' என்பர். இது 'திருவில்' (புறம் 20:10, அகம் 84:1), 'விசும்பின்வில்' (அகம். 192:3-4), 'வானவில்' (பரி. 18:39), 'குறைவில்' (பெருமபாண். 292) என்னும் பெயர்களால் சுட்டப்பட்டுள்ளன. கார் காலத்திலும் கூதிர் காலத்திலும் இவ்வில்லின் தோற்றம் நிகழ்தல் இயற்கை".[2]

இவ்வரிகளிலிருந்து சங்க இலக்கியங்களில் பரவலாக இந்திரன் பேசப் பெற்றமையை அறிய முடிகிறது. சிலப்பதிகாரத்தில் இந்திரனுக்கு விழா எடுத்தது பற்றிப் பேசப் பெறுகின்றது. மணிமேகலையிலும் இந்திர விழாவூரெடுத்த பகுதி இடம் பெறுகின்றது. நெய்தல் நிலத்திற்கு இந்திரன் மாறியமை, ஊர் முழுவதுமாக விழாவில் பங்கு கொண்டமை, விழா நாள் போன்றவை ஆய்வுக்குரியவை. அதற்கு முன் இந்திர விழா எவவாறு நிகழந்தது எனக் காணுதல் தேவையாகின்றது. இந்திர விழா என்ற தலைப்பிலமைந்த கட்டுரைபபகுதி விளக்கத் தேவைக்காக இவண் இணைக்கப்பெறுகின்றது.

மணிமேகலையின் தொடக்கத்தில் அமைந்த விழாவறை காதையிலும் சிலப்பதிகாரத்தில் இந்தரவிழவூரெடுத்த காதையிலும் பண்டைக்காலத்தில் பூம்புகார் நகரத்தில் கொண்டாடப்பட்ட பெரு விழாவாகிய இந்திர விழாவைப் பற்றிய குறிப்புகள் அமைந்துள்ளன. இவ்விழாவின் இயல்புகளையும் சிறப்புகளையும் காணுங்கால் பெறப்படும் செய்திகள் :

## 1. திருவிழாவின் பெருநோக்கம்

நாட்டில் கொண்டாடப்படும் விழா ஒவ்வொன்றுக்கும் நல்ல நோக்கம் ஒன்று அடிப்படையாக அமைந்திருத்தல இயல்பு. இந்நோக்கம் பெரும்பாலும் சமுதாயத்தின் உயர்வாழ்வு பற்றியதாகவே இருக்கும். இம்முறையில பண்டைத் திருவிழாவாகிய இந்திர விழாவுக்கும் சமுதாய நலவாழ்வு என்னும் உயரிய நோக்கமே அடித்தளமாக அமைந்துளளது.

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு

என வள்ளுவர் நாட்டின் நல்லிணக்கத்தை நவில்வர். இம்முறையில் நாட்டில் பசியும் பிணியும் பகையும் நீங்குதல் வேண்டும் என்பதையும் 'வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி' மகிழ்தல் வேண்டும் என்பதனையும் இருபெருங்காப்பியங்களும் இயம்புகின்றன.

## 2. தொன்மைத் திருவிழா

இந்திரவிழா தமிழகத்திற்குரிய பெருவிழாவாக இரட்டைக் காப்பியங்களில் கூறப்பட்டுள்ளது. மேலும் இவ்விழா பழமைச் சிறப்புடைய திருவிழாவாக விளங்கியதென்பதற்கும் சான்றுகள் உள. வான்மீகி, காளிதாசர் ஆகியோரும் இந்திரவிழாவைப் பற்றிய குறிப்புகளைத் தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர் என்பதை டாக்டர் உ. வே. சா. குறிப்பால் அறியலாம்.

தொல்லிலக்கணியாகிய தொல்காப்பியர் 'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' என இந்திரனாகிய கடவுளைக் குறிப்பிட்டு உள்ளதும் இந்திர வழிபாட்டின் தொன்மையை விளக்கும் சான்று ஆகும். இப்பகுதிக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியரும் இவ்விழாவைப் பற்றிய குறிப்புகளைக் குறிப்பாகச் சுட்டியுள்ளார். 'இன்குரல் எழிலிக்கும் இறைவனாகிய இந்திரனை ஆண்டையோா விழவு செய்து அழைத்தலின் அவன் வெளிப்படும்' என்றார் எனவரும் உரைப்பகுதியும் இதனைத் தெளிவிக்கும்.

## 3. திணை ஒருமைப்பாட்டு விழா

தமிழில் நிலங்களை நான்கு வகைகளாகவும், ஐந்திணைகளாகவும் பிரித்துக் கூறுதல் மரபு. ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய வழிபடு கடவுளர்களும் உளர். இம்முறையில் கடலும் கடல் சார்ந்த இடமுமாகிய பூம்புகார் நகரம் நெய்தல் திணைப்பகுதியாக விளங்குவது இந்நிலத்திற்குரிய வருணன் வழிபடு கடவுளாவான். இதனை 'வருணன் மேய பெருமணல் உலகம்' எனவரும் தொல்காப்பியத் தொடர் விளக்கும். இந்திரன் மருதநிலத்திற்குரிய கடவுள் என்பதை 'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' எனவரும் தொடர் தெளிவுபடுத்தும்.

பூம்புகார் நகரத்தில் கொண்டாடப்பட்ட விழா, திணை ஒருமைப்பாட்டு விழாவாகவும் விளங்கும் சிறப்பைக் காணலாம். நெய்தல் நிலத்துக்குரிய பூம்புகார் நகரத்து மக்கள் மருதநிலத்திறகு உரிய கடவுளாகிய

இந்திரனுக்கு விழாச் செய்கினறனர். மருதமும நெய்தலும் மயங்கி நின்று நிகழ்த்தப்படும் இந்திரவிழா இம்முறையில் திணை ஒருமைப்பாட்டு விழாவாகவும் திகழ்கின்றது

இந்திரன் மேகத்திற்குத் தலைவனாக விளங்குபவன். இந்திர விழாவாகிய சமுதாய விழாவின் நோக்கம் நாட்டின் நல்வாழ்வே ஆதலால் இததகைய நல்வாழவிற்கு அடிப்படையாக விளங்கும் மழையைப் பெறுவதற்காக மழைக்கடவுளாகிய இந்திரனை நோக்கி இவ்விழா நிகழ்த்தப்பட்டது எனக் கொள்ளலாம்.

## 4. தலைமைச் சிறப்புடைய விழா

இந்திரவிழா கொண்டாடப்பட்ட பூம்புகார் நகரத்தில் பல்வேறு கடவுளருக்கும் கோயில்கள் விளங்கின. பிறவாயாக்கைப் பெரியோனுக்கும், அறுமுகச் செவ்வேளுக்கும், வால்வளை மேனி வாலியோனுக்கும், நீலமேனி நெடியோனுக்கும் கோயில்கள் விளங்கின என்பதைச் சிலப்பதிகாரம் கூறும். மணிமேகலையும் நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாகப் பதிவாழ் சதுக்கத்து தெய்வம் ஈறாகக் கோயில்கள் இருந்ததைச் சுட்டும். தேவர்களையும் மூவர்களையும் விட இந்திரனுக்கே இவ்விழா நிகழ்த்தப்பட்டதை நோக்க, இக்கடவுளரை விட மழைக்கடவுளாகிய இந்திரனே இரட்டைக் காப்பியக் காலத்தில் முதற் கடவுளாகப் போற்றப்பட்டு இருத்தல் வேண்டும் என்ற முடிவினைக் கொள்ளவியலும், அல்லது பிற கடவுளர் இருப்பினும் இந்திரனே மழைக் கடவுளாதலால், மழை பெறுவதற்காக நிகழ்த்தப்பட்ட இவ்விழாவில் இந்திரன் ஏத்தப்பட்டான் எனக்கொள்ளினும் தவறாகாது. இம்முறையில் இந்திரவிழா தலைமைச் சிறப்புடைய விழாவாகவும் விளங்கக் காணலாம். இளங்கோவடிகள் 'மாமழைப் போற்றுதும் மாமழை போற்றுதும்' எனக் கூறியிருப்பதும் இதனை அரண்செய்யும் சான்றாகக் கொள்ளலாம்.

## 5. சாந்தி விழா

தீமைகள் நிகழ்தற்குரிய குறிப்புகளைக் காண்புழி மக்கள் தங்கள் வழிபடு கடவுளருக்கு விழாச் செய்தல் இயல்பு. இதற்கு ஆய்ச்சியர் குரவையுள் நிகழ்த்தப்பட்ட வழிபாடு சான்று பகரும். 'குரவையாடுதும் யாமென்றாள் கறவைகன்றுதுயர் நீங்குக எனவே' எனவரும் பகுதி இதனை உணர்த்தும். இம்முறையில் இந்திரவிழாவும் ஒருவகைச் சாந்தி விழாவாகவே கொண்டாடப்பட்டதை உணரலாம்.

இந்திர விழாவிற்குத் திவகச் சாந்தி என்பதும் தீபசாந்தி என்பதும்

வேறு பெயர்கள். நாவலந்தீவு, சம்புத்தீவு என்பவை இந்நாட்டிற்குப் பழமையாக விளங்கும் பெயர்கள். நாவல் மரங்கள் மிகுதியாய் இருந்தமையால் இப்பெயர் எய்திற்று என்பர். இத்தீவில் உள்ளார்க்கு அசுரரால் வரும் தீங்கைப் போக்குதற்காகச் சம்பாபதி என்னும் காவல் தெய்வத்தால் இந்திரனுக்குச் செய்யப்பட்டமையால் தீவகச் சாந்தி அல்லது தீபசாந்தி என்னும் பெயர் இவ்விழாவிற்கு வழங்கிற்று. இதனை மணிமேகலை கூறுகின்றது.

இந்திரவிழாச் செயதலை மறுப்பின் நாளங்காடியில் நரகரை புடைத்து உண்ணும் பூதம் பொருந்தாதாயிடும் என்றும் நாட்டுக்குக் கேடுகள் பல சூழும் என்றும் கருதப்பட்டது. இக்குறிப்புகளால் இந்திர விழாவானது நாட்டின் துன்பத்தை நீக்குதற்காகச் செய்யப்படும் சாந்தி விழாவாகத் திகழ்ந்தது என்னும் குறிப்பை அறியலாம்.

## 6. விழா முறைகள்

### விழாத் தொடக்கம்

இந்திர விழா தூங்கெயில் எறிந்த தொடித்தோட்செம்பியன் காலம் முதலாகப் பூம்புகாரில் கொண்டாடப்பட்டது. இம்மன்னன, இந்திரன் அவுணரோடு செயத போரில் இநதிரனுக்குத் துணை செய்தான் என்றும் அவன் வேண்டுகோளுக்கு ஏற்ப இந்திரனும் ஆண்டுதோறும் நிகழ்த்தப்படும் இவ்விழாவில் கலந்துகொண்டான் என்றும் மணிமேகலை கூறுகின்றது. இக்குறிப்பால் பூம்புகார் நகரில் சோழர்குலத் தோன்றலாகிய தொடித்தோட் செம்பியன் காலம் முதலாக இவ்விழா கொண்டாடப்பட்டது என அறியலாம்.

ஆனால் மணிமேகலையிலேயே காவல் தெய்வமாகிய சம்பாபதியால் இந்திரனுக்குச் செய்யப்பட்டது இவ்விழா என்ற குறிப்பும் இடம் பெற்றுள்ளதை முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது. இககுறிப்பு இவ்விழா காவல் தெய்வமாகிய சம்பாபதியால் தொடங்கப்பட்டது என்பதை விளக்கி நின்றது.

இவ்விரு குறிப்புகளும் முரணுவது போல அமைந்துள. ஆயினும் முசுகுந்தன் இந்திரனை வேண்டிய பின்னர் தந்நகரததிறகு உரிய காவல் தெய்வமாகிய சம்பாபதியை முன்நிறுத்தி இவ்விழாவைச் செயதிருக்கலாம் என இரண்டு குறிப்புகளையும் இணைத்துக் கொள்வது இம்முரண்பாட்டைத் போக்குவதாகும்.

## 7. விழா நாள்

இந்திர விழா சித்திரை மாதத்தில் சித்திரை விண்மீனும் நிறைமதியும் சேர்ந்த நனனாளில் தொடங்கப்படும். 'இதனை சித்திரைத் திங்கள் சேர்ந்தென' எனவரும் சிலப்பதிகாரத் தொடரால் அறியலாம். மேலும் இவ்விழா தொடர்ந்து இருபத்தெட்டு நாட்கள் நடைபெறும் என்பதை,

'விழாக்கோ ளெடுத்த
நாலேழ்நாளினும்' என்றும்

'நாலேழ் நாளினு நன்கறிந்தீரென'

என்றும் வரும் தொடர்களால் அறியலாம்.

## 8. பூதத்திற்குப் பலி

மருவூர்ப் பாக்கத்திற்கும் பட்டினப் பாக்கத்திற்கும் இடையில் அமைந்தது நாளங்காடி. இங்கு இந்திரன் ஏவலால் அனுப்பப்பட்ட சதுக்கப்பூதத்தின வாழ்விடம் அமைந்துள்ளது. இப்பூதத்திற்கு மறக்குடிப் பெண்டிரும் மறவரும் பலிகொடுத்து, புழுக்கலும் நோளையும் விழுக்குடைமடையும், பூவும், புகையும், பொங்கலும், படைத்து, துணங்கைக் கூத்தும் குரவைக் கூத்தும் ஆடி விழாவைத் தொடங்குவர்.

## 9. மன்றங்களில் பலி

பூம்புகார் நகரத்தில் வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் நின்ற மன்றம், பூதசதுக்கம், பாவைமன்றம் முதலாய மன்றங்கள் நிறைந்திருந்தன. இம்மன்றங்களில் அமைந்த் தெய்வங்களுக்குப் பலியூட்டுதல் என்பதும் விழா நிகழ்ச்சிகளில் ஒன்று.

## 10. முரசறைதல்

விழா நிகழ்ச்சியின் தொடக்கத்தையும் விழாவின்போது மக்கள் ஒழுக வேண்டிய நெறிகளையும் ஊராருக்கு 'முரசறைந்து அறிவிப்பர். இதற்காக இந்திரனது வச்சிர படைக்கு அமைந்த கோட்டத்தில் உள்ள மங்கல முரசினைக் கச்சையணிந்த யானையின் பிடர்த்தலையில் ஏற்றுவர். ஐராவதக் கோயிலினின்று விழாச் செய்தியை முரசறைவர்[1]. கற்பகத் தருவிற்கு அமைக்கப்பட்ட தருக்கோட்டத்தின் முன்னர் அட்டமங்கலத்தோடு ஐராவதம் உருவத்தை எழுதிய கொடியைத் துறக்கத்தே செல்ல ஏற்றுவர்.

வானம் மும்மாரி பொழிக, மன்னவன் செங்கோலனாகுக, வீதிகளையும் வீடுகளையும் அணிசெய்மின், பூரணகும்பத்தையும் பாவை விளக்கையும் பரப்புமின், பழமணல் மாற்றிப் புதுமணல் பரப்புமின், கோயில்களில் விழாச் செய்மின், பட்டி மண்டபத்தில் பாங்கறிந்து ஏறுமின், செற்றமும் கலாமும் செய்யாது ஒழிமின் என வரும் செய்திகள் முரசறையுங்கால் மொழியப்படுவனவாகும்.

## 11. பலரும் கலந்து கொள்ளுதல்

இவ்விழாக் காலத்தில் பூம்புகார் நகரம் முழுவதும் பொலிவோடும் மகிழ்வோடும் விளங்கும். ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும், அரசகுமரரும், பரதகுமரரும் கலந்து உருவெய்திய கடவுளரும் பரந்து, ஒருங்கீண்டிய பாடைமாக்களும் மன்னவரும் விண்ணவரும் மகிழ்வோடு கலந்து கொள்வர். கங்குலும் பகலும் மகிழ்ச்சி ஆரவாரத்தோடு இவ்விழா நடக்கும்.

## மஞ்சனமாட்டுதல்

இந்திர விழாவில் மழைக் கடவுளாகிய இந்திரனுக்குத் திருமஞ்சனம் ஆட்டுதலே இன்றியமையா நிகழ்ச்சி. தண்ணறுங் காவிரியின் தாதுமலிந்த பெருந்துறையில் புண்ணிய நன்னீரைப் பொற்குடத்தில் ஏந்தி வருவர். மண்ணகம் மருள வானகம் வியப்ப விண்ணவர் தலைவனுக்கு அரசகுமரரும் பரதகுமரரும் விழுநீர் ஆட்டுவர். விழாவையொட்டிப் பல்வேறு கடவுளர் கோயில்களிலும் பூசனைகள் நிகழும்.,

இவையே இந்திரவிழாவைப் பற்றி இரு காப்பியங்கள் கூறும் செய்திகளாகும்.

இங்ஙனம் சமுதாய நல்வாழ்வை உயர்நோக்கமாகக் கொண்டு செய்யப்பட்ட பெருவிழாவாக, பழமைச் சிறப்புடைய தொன்மைத் திருவிழாவாக, திணைமக்களின் ஒருமைப்பாட்டு நல்விழாவாக, தலைமைச் சிறப்புடைய விழாவாக, துன்பத்தை நீக்கும் சாந்தி விழாவாகத் திகழ்ந்த சிறப்புடையது இந்திரவிழா[3].

இரண்டு காப்பியங்களிலிருந்தும் செய்திகளை உள் வாங்கிய கட்டுரையாளர் எவ்வெக் கோணங்களில் இந்திரவிழா நிகழ்ந்தது எனப் பேசுகின்றார். இதன் மூலம் இந்திரன் என்ற நிலத்தெய்வம் பெற்றிருந்த பெரும்புகழும், உணவுபடைத்து வழங்குதல் என்பது நடைமுறையில் தொடர்ந்து இருந்தது என்பதும் இன்னபிறவும் புலனாகின்றன. நிலங்கடந்த நிலையில் மன்னரின் முழு ஒத்துழைப்புடன் இவவிழா நடநதது என்பது

குறித்தலுக்குரியது. வேளாண் மக்களன்றிப் பிறரும் இவ்விழாவில் ஈடுபட்டு வந்துள்ளமையை அறியமுடிகின்றது.

காலங்காலமாக வேளாண் மக்கள் கொண்டாடிவரும் போகிப் பண்டிகையை இந்திரவிழா என்கிறார் நாரண. துரைக்கண்ணன். அவர் எழுதியுள்ள குறிப்புகளில் சில கீழே தரப்பெறுகின்றன.

*1.* தமிழ் மக்கள் கொண்டாடி வரும் பண்டிகைகளில் தைப் பொங்கல் விழா தலை சிறந்தது ஒன்றாகும். இப் பண்டிகை முதன் முதலில் சூரிய வழிபாட்டுக்கு உரியதாய்ப் பின்னர், அருக்கனில் சோதி வைத்த எல்லாம் வல்ல இறைவன் வழிபாடாய் முடிந்தது. தமிழர்கள் பண்டைக் காலத்தில் கண்ணன், முருகன், இந்திரன், வருணன், காளி ஆகிய தெய்வங்களை வழிபட்டு வந்தனர். ஒவ்வொரு தெய்வத்தாலும் தங்கள் வாழ்க்கைக்குரிய நன்மைகள் ஏற்பட்டு வருவதாக அவர்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். இந்திரன்-குபேரன், வாயு, வருணன், அக்கினி முதலிய தேவதைகளுக்கு அதிதேவதை யாதலால், போகியாகிய அவனே மக்களின் உயிர் வாழ்க்கைக்கும் சுக போகங்களுக்கும் ஏதுவான நன்மைகளை உண்டு பணணுகினறான் எனறு அழுத்தமான நம்பிக்கை கொண்ட மக்கள், ஆணடுதோறும் ஒருநாள் இந்திரனை நினைத்துப் பண்டிகை கொண்டாடலாயினர். பொங்கல் பண்டிகைக்கு முன்னால் கொண்டாடப்படும் போகிப் பண்டிகை போகியான இந்திரனை முன்னிட்டே கொண்டாடப்படுவதாகும் என்று சொல்லப்படுகிறது.

இன்று நாம் போகிப் பண்டிகை எனக் கொண்டாடி வருவதுதான், பண்டைக்காலத்தில் இந்திரவிழா என்ற பெயருடன் கொண்டாடப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காவியங்களில் அக்கால மக்கள இந்திர விழாவைக் கொண்டாடிய செய்திகள் காணப்படுகின்றன.

**2.** முன்னொரு காலத்தில் சோழ மன்னனொருவன் 'என் நகரத்தில் விழாக் கொண்டருள வேண்டும்' என்று இந்திரனை வேண்டிக் கொண்டான் என்றும், அதற்குத் தேவேந்திரன் இணக்கந் தெரிவித்தான் என்றும், அதன்படி இந்திரவிழா காவிரிப்பூம்பட்டினத்தில் நடைபெற்று வரலாயிற்று என்றும் சீத்தலை சாத்தனார் பாடியிருக்கிறார்[4].

எனவே இந்திரவிழாவிற்குப் பல காரணங்கள் சொல்லப்படுவதை உணரலாம். அகச சான்றுகளாக எதுவுமில்லை என்பதும் உடன் வைத்துக் கருதத்தக்கது.

வேறு கோணத்தில் அறுவடை நாளைச் சிந்திக்கும் நா. வானமாமலை, தனது 'தமிழர் வரலாறும் பண்பாடும்' என்ற நூலில் உழத்தியர் போன்ற பெண்டிர் பாவை நோன்பு நோத்பதாக உரைப்பது குறிக்கத்தக்கது. சங்க இலக்கியம் உரை, மானுடவியல் கூறுகளைக் கொண்டு புதிய சிந்தனைகளை விதைக்கின்றார் அவர். பாவை நோனபு உற்பத்தித்திறன், பிற பணிகள் ஆகியவற்றை அருகருகே வைத்த நிலையில் அவரின் சிந்தனைகள் கீழ்க்கண்டவாறு அமைகின்றன.

அ. தமிழ்நாட்டில் தைமாதம் அறுவடை காலமாக இருந்தது. இப்பொழுது காலநிலை மாறுபாட்டால் பங்குனி அறுவடைக் காலமாக ஆகிவிட்டது. முற்காலத்தில் தைப் பொங்கல் விழா அறுவடை விழாவாகவே கொண்டாடப்பட்டது. இன்று தை மாதம் அறுவடைக் காலமாக இல்லாவிட்டாலும் வழக்கத்தை யொட்டி இன்று தைமாதப் பிறப்பை அறுவடை விழாவாகவே தமிழ் மக்கள் கொண்டாடி வருகிறார்கள்.

ஆ. கொங்கல் விழாவிற்கும் பாவை நோன்பிற்கும் தொடர்பு உண்டு. பாவை நோன்பு மார்கழி மாதம் தொடங்கி தை மாதப் பிறப்பன்று முடிவது. ஏழாம் நூற்றாண்டில் பாவை நோன்பு கொண்டாடப்பட்ட விதத்தைக் குறித்து திருப்பாவையினின்றும் நாம் அறியலாம்.

வையத்து வாழ்வீர்காள்
நாமும் நம் பாவைக்கு
செய்யும் கிரிசைகள்
கேளீரோ என்பர்

இ. இந்நோன்பு யாரை மகிழ்விக்க? கண்ணனை மகிழ்விக்கவா? இல்லை. 'அவன் அடிபாடி' அவர்கள நோன்பு நோற்றாலும் நோன்பு பாவை நோன்பே; பாவை மகிழ்விக்கவே, பாவை யார்? பாவை மண்ணாலோ, சாணத்தாலோ, மணலாலோ செய்த படிமம். இது பூமியையே குறிக்கும். இந்நோனபு பூமியை மகிழ்விக்கவே நோற்கப்படுகிறது. பூமி மகிழ்ந்தால் செழிப்பைத் தருவாள். ஆண்டாள் ஆயர் மகளிர் கொண்டாடும் பாவை நோன்பை வருணிக்கிறாள். ஆகையால் அவர்களுககுச் செல்வச் செழிப்பு எதுவோ, அதனைப் பாவை அருளும் என்று பாடுகிறாள்.

ஓங்கி உலகளந்த
உத்தமன் பேர் பாடி
நாங்கள் நம் பாவைக்குச்
சாற்றி நீராடினால்,

தீங்கின்றி நாடெல்லாம்
திங்கள் மும்மாரி பெய்து
ஓங்குபெரும் செந்நெல்
ஊடு கயல் உகள
பூங்குவளைப் போதில்
பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து
வாங்கக் குடம் நிறைக்கும்
வள்ளற் பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம்
நிறைந்தேல் ஓர் எம்பாவமாய்!

ஆயர் மகளிர் விரும்பும் செல்வம் எதுவென்று ஆண்டாள் மேற்கண்ட செய்யுளில் குறிப்பிடுகிறாள். இச்செல்வத்தைப் பாவை தருவாள். அவள் தருவதற்கு, ஆயர் மகளிர் தங்கள் உடல் வருந்த நோன்பு நோற்கிறார்கள். பூமி செழிப்பைத் தருவதற்கு இவர்கள் உடலை வருத்துவானேன்? இவ்வினாவிற்கு விடைகாணத் தொல்குடி மக்களின் உலகக் கண்ணோட்டத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

இயற்கையின் இயக்க விதிகளைத் தொல்குடி மக்கள் அறிந்தவர்களல்லர். கூட்டுழைப்பினால் அவர்கள் இயற்கையோடு போராடினார்கள். போராட்டத்தின் முதல் வெற்றியே புன்செய்ப் பயிர்த் தொழில். அதற்கடுத்த வெற்றி ஆடுமாடுகளைப் பழக்கியது. மனிதன் தனது செயலால் இயற்கையினின்று தனக்குத் தேவையானவற்றைப் பெற முடியுமென்று கண்ட தொல்குடி மக்கள் இயற்கை விதிகளோடு எவ்விதத் தொடர்புமில்லாத தங்களது செயல்களால் இயற்கையை வசப்படுத்த முடியுமென்று நம்பினாரகள். இடி முழக்கம் போன்ற ஓசைகளை எழுப்பிக் கூத்தாடினால், தங்களைப் பார்த்து இயற்கையும் மழையைப் பொழியும் என்று எண்ணினார்கள். அதற்காக ஒரு கூத்தும் வகுத்துக் கொண்டார்கள். காற்றிலிருந்து பயிரைப் பாதுகாக்க காற்றில் அசைந்தாடுவதுபோல் நடனமாடி அதைப் போல பயிரையும் ஆடும்படிக் கேட்டுக் கொண்டார்கள். அசைந்தாடினால் காற்று பயிரை வேரோடு பிடுங்கி எறியாது எனபது அவர்கள நம்பிக்கை. உலக முழுவதிலும் இத்தகைய வழக்கங்கள் இருநதிருக்கின்றன. தொல்குடி மக்களினத்தவர் பலரிடம் இத்தகைய வழக்கங்களைக காணலாம். இதனை நாம் மந்திரம் என்றழைக்கிறோம். இம் மந்திரம தான் மனிதனுக்கும் இயற்கைக்கும் ஏற்பட்ட முதல் தொடர்பு. மனிதன் மந்திர முறைகளினால் இயற்கையை வசப்படுத்த முயன்றான். இயற்கையை அறிய புறவய முறைகள் தோன்றிய பின், மந்திரத்தை கொன்று

விட்டு, அதன் வயிற்றில் விஞ்ஞானம் தோன்றியது. இம்மந்திரத்தின் எச்சமே பாவை நோன்பு. தங்கள் உடலை வருத்தித் தூய்மையாக இருந்தால் பாவையும் வரந்தரும் என்ற ஆயர் மகளிரது நம்பிக்கையே திருப்பாவையில் கவிதா ரூபத்தில வெளிப்படுகிறது.

ஈ. இவ்விழாவைக் கொண்டாடுபவர்கள் பெண்கள். ஆரம்பத்தில் உழவுத் தொழிலைக் கண்டுபிடித்தவர்கள் பெண்களாதலால் அவர்களே அவ்விழாவிற்குரியவர்களாகிறார்கள். பாவையும் பெண் தெய்வம். அதன் பூமியின் படிமம். அவளை மந்திர மூலமும் பாட்டின் மூலமும் மகளிர் மகிழ்விக்கிறார்கள். மகளிா கண்ணனை வழிபடுகிறார்களென்றாலும் கண்ணனிடம் பறை மட்டுமே கேட்கின்றார்கள். பறை எதற்கு? குரவைக்கூத்தாடப் பறையை முழக்க வேண்டு பறையைக் கண்ணனிடம் பெற்று அவர்கள் பாவைப் படிமம் செய்து அதன் முன் குரவையிடுவார்கள். அவர்கள் 'சம்மானம்' பெறுவது கண்ணனிடமல்ல, பாவையிடமே. இன்றும் பொங்கல் பொங்கும்போது பெண்கள் குரவையிடுகிறார்கள். இது மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் குரல் ஒலி. இது குரவைக் கூத்தின் எச்சம்.

உ. இவ்விழா புறநானூற்றுக் காலத்தில் கொண்டாடப்பட்டது. நெல் களத்தைப் போர்க்களத்துக்கு உவமை கூறுவது பண்டைப் புலவர் மரபு. குறுங்கோழியூர் கிழாரென்னும் புலவர் நெல்களத்தை வருணித்து அதனைப் போர்க்களத்துக்கு உவமை கூறுகிறார். அன்று அறுவடை விழா "சாறு கொண்ட களம்" என்று புலவர் கூறுகிறார். சாறு என்றால் விழா. அறுவடை விழாவைப் பற்றி இச்செய்யுளிலிருந்து நமக்குச் சில வரலாற்றுக் குறிப்புகள் கிடைக்கின்றன. 2000 ஆண்டுகளுக்கு முன்பு நம் நாட்டு உழவர் பொங்கல் கொண்டாடிய முறையைப் பற்றி இச்செய்யுள் அறிவிக்கிறது.

வலங்கு செந்நெல் கதிர் வேய்ந்த
வாய் கரும்பின் கொடிக் கூரை
சாறு கொண்ட களம் போல,
வேறு வேறு பொலிவு தோன்ற
குற்றானா வுலக்கையால்
கலிச் சும்மை வியாலங் கண்

நெற் கதிர் வரிந்த கூரை வீடுகள். கரும்பை வாசலில் தோரணமாகக் கட்டியிருக்கிறார்கள். இவ்வலங்காரம் விழா நாளை அறிவிக்கின்றது. தானியம் குவியலாகக் கிடக்கிறது. உலக்கையைக் கழுவி அணி செய்து வைத்திருக்கிறார்கள். அது நெல்குற்ற அல்ல. வள்ளைக் கூத்தாடு களத்தின் நடுவே கிடத்துவதற்காக வைத்திருக்கிறார்கள். இவ்வாறு விழா கொண்டாடப்படுகிறது. இவவிழா வள்ளைக் கூத்து, நெல் குற்றுவது போல

ஆடும் கூத்து. ஆகவே பெண்கள் ஆடும் கூத்து. இக்கூத்து விழாவில் மகளிரின் பங்கை வலியுறுத்தும் உழவுத் தொழிலின் ஆரம்ப காலத்தில் மகளிர் அத்தொழிலில் ஈடுபட்டிருந்ததன் எச்சமாக இக்கூத்து காணப்படுகிறது.

ஊ. பொங்கல் விழாவிலே பூமியை வாழ்த்தியது போலவே, மகளிர் நீர் தரும் ஆற்றையும் வாழ்த்தினார்கள். ஆறு பெண்பாலாகக் கருதப்பட்டது. தைந்நீராடல் என்பது பண்டைய வழக்கம். இவ்வழக்கதைப் பரிபாடல் வருணிக்கிறது. வையை நதிக்குப் பொங்கலிட்டுப் பூசனை புரிகின்றனர். மதுரை நகர மகளிர்; நாட்டுக்கு வளம்தர வேண்டுமென வையை நதியை வேண்டுகிறார்கள். பின்பு தங்கள் தாய்மாரருகில் நின்று நீராடுகிறார்கள். நீராடும் போது வையையை நோக்கிப் பாடுகிறார்கள்.

> வையை! நினக்கு மடைவாய்த் தன்று
> மையாடல் ஆடல் மழுபுலவர் மாறு எழுந்து
> பொய் ஆடல் ஆடும் புணர்ப்பில் அவர், அவர்
> தீ எரிப்பாலும் செறிதவம் முன்பற்றியோ,
> தாயருகா நின்று தவத்தை நீராடுதல்
> நீ உரைத்தி வையை நதி! (பரிபாடல் - 11)

எ. எனவே, பொங்கல் விழா உழவர்களின் ஆர்வங்களை வெளியிடும் விழாவாகக் கொண்டாடப்பட்டது. அவர்கள் வாழ்க்கை, விழாவன்று மட்டும் வளம் பெற்று விளங்காமல் என்றும் வளம் பெற வேண்டும் என்பதே அவர்கள் ஆர்வம். மந்திர மொழியின் மூலமும், வணக்கத்தின மூலமும் இயற்கையை வசப்படுத்த அவர்கள் செய்த முயற்சி இன்று வேறு வழியில் நிறைவேறி வருகிறது. மனிதன் விஞ்ஞானத்தின் மூலம் இயற்கையை வென்று வருகிறான்.

பொங்கல் விழா என்ற தலைப்பில் (பக் 11-19) இங்ஙனம் பல செயதிகள் கூறப்படுகின்றன. இவற்றைக் கணக்கில் கொண்டு சிந்தித்தால் மேலும் பல செய்திகள் கிடைக்கின்றன.

நாட்டுப்புறப் பாடலகளை ஆய்வு செயதோர் மழைக்கெனச் சடங்காற்றிய பல நிலைகளைக் குறிக்கின்றனர். "இந்தியா முழுவதும் மழை பெறவேண்டி மாயவித்தைகள் செயயப்படுகின்றன; இச் சடங்குகளைப் பெண்கள் மட்டுமே செய்கின்றனர்" (R. Birffault, The Mother, Vol. III. p. 10) என்ற மேற்கோளுடன் உழத்திகளின் பணியை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் என்ற நூல் தருகின்றது"[5]. இந்த உலகத்திலுள்ள வெளி, வானம், திரை ஆகிய மூன்று இடங்களிலும் வெயில் காலை நேரம் பிபரஞ்ச ஒழுங்கு, நெருப்பு வெறியூட்டும் பானம், இடி, புயல் காற்று வலிமை

ஆகிய அளந்தறிய முடியாத ஆற்றல்களையும் பொருள்களையும் கண்ட இந்தியப் பழங்குடி மக்கள் இவைகளைத் தெய்வங்கள் என்று மதிக்கத் தலைப்பட்டதால் வெயிலைச சூரியக் கடவுள் என்றும் காலை நோக்கத்தை உலவி என்றும் பிரபஞ்ச ஒழுங்கை நிலை நிறுத்துபவன் வருணன் எனறும் நெருப்பை அக்கினி என்றும் வெறியூட்டும் பானத்தை சோமன் என்றும் இடிக்கும் புயலுக்கும் உரியவன் உருத்திரன் என்றும் காற்றை வாயுதேவன் என்றும் வலிமைமிக்க தேவனை இநதிரன் என்றும் பெயர் வைத்து வழிபட்டு வந்தார்கள்[6]" என்று வரும் மேற்கோளை எடுத்தாளும் கே.ஏ. குணசேகரன், "பெண்கள் வளமையோடு தொடர்புடையவர்கள் என்பதால் முளைப்பாரி விழாவில் கும்மியாட்டம் பெண்களால் ஆடப்படுகின்றது. இவ்வாறு கும்மியாடுவதால் முளை விதைகள் தளிர்த்து வளர்ந்து வரும் என மக்கள் நம்புகின்றனர். இவர்கள் பாடும் கும்மிப் பாடல் வரியில் மழையினால் பயிர் வளம் பெருக வேண்டும் என்ற நோக்கம் வெளிப்படுகிறது [11]. என்றும் கருதுகிறார். கம்பனின் உழத்தி பாடியது என்ன என்பதை அறிய இயலவில்லை. ஆனாலும் மேற்காட்டிய செயதிகளான் மழை வளங்கேட்டே உழவர்கள் இந்திரவிழா எடுத்தும், கும்மிபாடியும், வழிபட்டுள்ளனர் என்பது வருவித்துக் கொள்ளப் பெறுகின்றது. மருதநிலத் தெய்வமாதலின் இந்திரனை முன்னிறுத்தி இவை நிகழ்ததப்பட்டன. நிகழ்த்தப்படுகின்றன.

நடவுப் பாடல்கள், வேலைப்பளு தெரியாமலிருக்கப் பாடப்படுபவை எனக் கூறுவது பொதுவான செய்தி. ஆயினும் ஒருககாலத்தில் வழிபாட்டுணர்வுடன், மழை வளங்கேட்டு மாரியையோ, வருண பகவானையோ, பிற கடவுளரையோ வணங்குவதுதான் காணப்பட்டது. சான்றாக, உழத்தி யொருத்தி, நாற்றுக் கற்றைகளைக் கையில் பிடித்தபடி பாடத் தொடங்கும முதல்வரியாக,

'இந்திரனை நோக்கி
எடுத்தேன் திரு அலகு'

என்கிறாள. "மற்ற உழத்திகள் கூடவே தொடர்நது பாடுகின்றனர். இவை, உழத்திகள் முதலிலே தெய்வத்தை வழிபடுவதற்காகச் சொல்கின்ற சொற்கள். நம்நாட்டிலே எந்த வேலையாயிருந்தாலும் முதல் வேலை தெயவ வழிபாடு அல்லவா? இநதிரனை இவள் வழிபடுகிறாள. இந்திரனுக்கு எதற்காக இங்கே வணக்கம் என்ற கேள்வி எழலாம். பயிர்த் தொழிலுக்கு முக்கியமாக வேணடியது மழை, மழை தரும் மேகங்களுக்கு நாயகன் இந்திரன் என்பது நமது பழங்கொள்கை. ஆகவே, பயித தொழிலுக்கே இந்திரனைத் தெயவமாகக் கொள்கின்றோம் ('வேந்தன் மேயத் தீம்புனல் உலகமும்' என்பது தொல்காப்பியம. வேந்தன் - இந்திரன்,

புனலுலகம் - பயிர்த்தொழில் நடக்கும் வயல்களாகிய மருதநிலம்) . . . இந்திரனை வணங்குவது, நாட்டிலுள்ள நெடுநாளைய வழக்கம்" என விவரிக்கும் மு. அருணாசலம் தொடர்ந்து சந்திரனை வழிபட்டது, பயிர் வரை வேண்டல் போன்ற பாடல் வரிகளைக் காட்டி இவற்றில் சம தர்ம உணர்வுக் கருத்தைப் பிற்பாடு வந்தோர் புகுத்தியமையைச். சுட்டுவார். ஏட்டில் எழுதப் பெறா இலக்கியங்கள் இவை. அதனால் தன்னுணர்ச்சிகளைப் பாடலினிடையே கலந்து பாடத் தொடங்கினர். இதனால் வழிபாட்டுணர்வு மாறி, நடவு நடும் போது எதையாவது பாடுவது என்ற சடங்குணர்வு வளர்ந்தது. பிறகு, அதுவும் மாறி, கேட்டதை, கண்டதைப் பாக்களாக்கத் தொடங்கிய சூழலில் இயக்கக் கருத்துக்கள் பாடல்களில் குடியேறின. இது, பாட்டுக் கட்டும் கலைதானே தவிர வழிபாடோ சடங்கோ இல்லை. நாட்டுப்புற பாடல்களில் இத்தகைய மாற்றத்திற்கு இறைமீதுண்டான நம்பிக்கையின்மை காரணமில்லை. சமூக, பொருளாதார ஏற்றத் தாழ்வுகளே காரணம்.

இவ்வாறு பாடப்பெறும் மரபு மாற்றம் பெற்றுள்ளதை மாவட்டங்கள் தோறும் காணலாம். கொங்கு நாட்டில் ஒரு வகையாகவும், இராமநாதபுரம் மாவட்டத்தில் வேறு வகையாகவும், நாஞ்சில் பகுதியில் மாறுபட்டும் ஆட்டம், வழிபாடு, பாடல் ஆகியவை அமைதலுக்குக் கால வளர்ச்சியே முக்கியக் காரணம். எனினும் பழம் மரபுகள் இவற்றினூடே நெளிந்து கொண்டிருப்பதனை மறுக்க இயலாது. பின் வந்தோர் தத்தம் இறைக்கு முன்னுரிமை கொடுத்தனர். தமிழகம் முழுவதும் பரவலாகப் பேசப் பெற்ற இந்திரன் ஒரு கணங்கூட நினைக்கப் பெறவில்லை. இநதிர வழிபாட்டின் எச்சங்கள் தென்படுகினறன. ஆனால் இந்திரனைக் காணவில்லை. புதியன வற்றின் செல்வாக்கு பழையனவற்றைக் கழித்து விடுகின்றது. சான்றாக

"ஏர்ப் பாடல்களில் இறைமாட்சி பேச்சப்படுகின்றது. புண்ணியத் தலங்களான திருப்பதி, மதுரை, சிதம்பரம், சீர்காழி, முதலிய ஊர்களை நினைவு கூர்ந்து, பின் பிள்ளையாரை வழிபட்டு, வேல் முருகனை வணங்கி நிற்கின்றனர். முருகனை நினைவில் நிறுத்தியவுடன் வள்ளி இணைந்து கொள்கிறாள். அவளைக் காளியின் அவதாரமாகக் கொண்டு அஞ்சி வணங்குகின்றனர். முருகன் கோவில் மகிமையும், சன்னதியில் கூடும் கூட்டச் சிறப்பையும், பாடுகின்றவர் முடவர், கூனர், குருடராய் இருந்தும், மலையேறி வரும் திறம்பெறக் காரணம் முருகனே என்றும் கூறி வணங்குகின்றனர். இறைவனைப் பற்றியல்லாத பாடல்களும் சில உளளன. நாரையின் முதற் குஞ்சு முள் பொறுக்கவும், இளைய குஞ்சு ஏர் உழவும், அவற்றுடன் காகம் கவலை அடித்து நிற்கவும், உழத் தொடங்குகின்றானாம் ஒருவன். இன்னொரு பாலவன் எருதுகளைப் புரவிகளாக்கி மகிழ்கின்றான்.

கதிரவனை வணங்கி நாற்றெடுக்கின்றனர். நகர்ப்புற மக்களின் ஒழுக்க உணர்வும் அதன்மீது கொண்டுள்ள அழிக்க முடியா நினைப்பும் இப்பாடல்களால் தெரிய வருகின்றன.

"தாசியவள் நாற்றெடுத்தால் - எங்க
தர்மமெல்லாம் பாழாகும்"

நாற்றெடுக்கும் தொழிலில் ஆண்களே ஈடுபடவேண்டும் என நம்புகின்றனர்.

'ஆண்பிள்ளையா நாற்றெடுத்தால் - நாங்க
அணை அணையா நெல் அறுப்போம்'

பயிற்தொழிற் பாடல்களில் ஏற்றப் பாடல்கள் வேறு பாடல்களினின்றும் தனித்தன்மை வாய்ந்தன என்றே சொல்ல வேண்டும். ஏற்றத்தில் தண்ணீர் இறைத்தல் விடியற் காலைக்கும் முன்னதாகத் தொடங்கி, விடிந்து பத்து நாழிகை வரையில் நடைபெறும. இந்நெடிய நேரம் தெரியாமலிருக்க நீண்ட பாடல்களைத் தொடர்ந்து பாடுகிறார்கள். பெண்கள் கூடத் தெரிந்து வைத்துள்ளனர்" [8] என்றப் பகுதியைக் குறிக்கலாம்.

அரண்சேர்க்கும் பிறிதொரு பகுதி கவனிக்கத்தக்கது : "ஏற்றப் பாட்டுப் பாடப்படும் விதம் சுவையானது. கீழே சாலைப் பிடித்திருப்பவன் பாட்டின் ஒருவரியைச் சொல்லுவான். அவ்வரியை மீதி மரத்தில் உள்ளவர்கள் இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பச் சொல்லவார்கள். இததகைய ஏற்றப் பாடலில் பிள்ளையார், முருகன், சிவன், திருமால் முதலிய தெய்வ வணக்கங்களும், தெய்வத்திறகுப் படையலிடும் உணவு வகைகளும் பெண்ணைப் பற்றிய வருணனைகளும் உரையாடல்களும் இடம் பெற்றுள்ளன. பிள்ளையாரும முருகனும் இணைந்தே வணங்கப் பெறுகின்றனர். அவாகளை வணங்குவதால் பலன்கள் நிறையக் கிடைக்கின்றனவாம். ஏற்றம் இருக்கும் கரையை முருகன் காப்பதாக நம்புகிறார்கள்.

எல்லாக் கடவுளரையும் எல்விதப் பேதமுமினறி வணங்குகினறனர். வாய்ச் சொற்களில் ஏற்படும் மாறுதல்களைக் கூட எண்ணிப் பார்க்காமல் இருக்கின்றனர்.

"புள்ளி மயிலேறும் பிள்ளையாரே வாரீர்"

"நாரதர் பிறந்தார் தேவகி மகனாய்"

"ஐவருக்கே வள்ளி அழகான பெண் ஆவாள்"

தலைமுறை தலைமுறையாகப் பாடிவரும் போது சொற்கள் மாறி வந்திருக்கவும் கூடும். அது பற்றிப் பாடுவோரிடம் கேட்டமைக்குச் சரியான விளக்கம் கிடைத்திலது. முருகனுக்குச் 'சேய்' என்றதொரு பெயர் உண்டு என்பதனால் 'பிள்ளையார்' என அழைக்கின்றனரோ என எண்ணத் தோன்றுகிறது. ஒலியால் வடிவம் பெற்று விளங்கும் பாடல்கள் இவை என்பதனால் நாரணர் - நாரதராகவும், அல்லி - வள்ளியாகவும் மாறி ஒலிக்கவும் அவையே பழகிப் போகவும் வாய்ப்பிருக்கிறது என்றாலும் இவை ஆய்வுக்குரியவை [9].

இதனால் காலந்தோறும் முறைமைகள் மாறிமாறி வந்திருப்பதை உணர முடிகின்றது. உழவர்களின் பெருந் தெய்வமாகப் பேசப் பெற்ற இந்திரன், தேவேந்திர குலத்தாரிடையே இன்று இடம் பெற்றுள்ள நிலை கணக்கிலெடுக்கப் பெற வேணடிய ஒன்றாகும்.

'இந்திர விழாவும் தேவேந்திரர்களும்" என்ற கட்டுரையின் மையச் செய்தியை உள்ளடக்கியே கீழ்காணும் பகுதிகள் வரலாறு, நடப்பியல், மாற்றம் ஆகியவற்றை உள்ளடக்கியவை. மழை தரும் தெய்வமாகத் தமிழகத்தின் மருத நிலத் தலைமையாளனான வேந்தன் நினைக்கப் பெற்றானே தவிர, அகலிகைக் கதையில் இடம்பெறும் தேவர் குலத் தலைவனான இநதிரன் நினைக்கப் பெற்றிருக்க வாய்ப்பில்லை என்பர். நிகழ்ச்சிகளின் உள்ளடக்கங்களை அறியக் கட்டுரைப் பகுதிகள் அப்படியே தரப்பெறுகின்றன.

"இன்று இந்திரன் என்று சொன்னவுடன் நமக்கு நினைவுக்கு வருபவன் வேதகால இலக்கியங்களுடன் தொடர்புடைய ஆரியக் கடவுள் இந்திரன் தான். ஆனால் ஆரியர்களின் வருகை தமிழகத்திற்குள் ஏற்படுவதற்கு முன்னமே தமிழகத்தில் மருத நில மக்களான மள்ளர்களின் (உழவர்) தெய்வமாக விளங்கியவன் இந்திரன் என்பதை நாம் நினைவதில்லை. மருத நிலத்தின் கடவுள் இந்திரன் என்பதைத் தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையில் நூற்பா 'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' என்று குறிப்பிடும். இஙகுக் குறிக்கப்படும் வேந்தனே தீம்புனல் (வயலும் வயல் சார்ந்த) மருத நிலத்தின் கடவுள் ஆவான். தொல்காப்பியரின் இலக்கணப்படி மருத நிலத்தின் கடவுள்வேந்தன் என்றே அறிகின்றோம். இங்கு குறிக்கப்படும் வேந்தன் மழைக்கடவுள் ஆவான். வேத இலக்கியத்தில் குறிக்கப்படும் இந்திரனும் மழைக்கடவுளே. இதனால் ஆரியர்களின் தமிழக வருகைக்குப் பினனர் மழைக் கடவுளான மருத நிலத்து வேந்தனும் ஆரியர்களின் மழைக் கடவுளான இந்திரனும் ஒன்றெனக் கருதப்பட்டனர் என்று மறைமலையடிகள் குறிப்பிடுவார். இக்கருத்து ஏற்புடையதே ஆகும்.

இந்து மதத்தில் [2] பல தெய்வங்கள் ஒன்றுக்கொன்று உறவுடையது அல்லது ஒன்று என்று சொல்லப்பட்டாலும் அந்தந்த மண்ணுக்கேற்ற பண்பாட்டில் வளர்ந்த தெய்வங்கள் அந்தந்தப் பண்பாட்டையுடைய மக்களுடன் ஏதோஒரு வகையில் நெருங்கிய தொடர்புடையதாக விளங்கும். அவ்வகையில் தமிழகத்தின் மூத்த மருத நில உழவர் குடிகளான மள்ளர் எனும் தேவேந்திரர்களின் தெய்வமாக இந்திரன் (தேவேந்திரன்) விளங்குகின்றார் எனலாம். ஏனென்றால் மருத நிலத்தை ஆண்ட மன்னனே பின்னாளில் அவனது வழிவந்தோரால் தெய்வமாக வணங்கப்பட்டான் என்பதையும் இங்கு தெளிவு படுத்தலாம். தமிழர்களின் தெய்வ வழிபாடு முன்னோர் வழிபாடு என்பதும் இதனை உறுதிப்படுத்தும். இவ்வகையில் மருத நிலக் கடவுளான இநதிரன் மருத நில மக்களான தேவேந்திர குல வேளாளர்களின் சமயப் பண்பாட்டில், வேளாண் பண்பாட்டில் முதலிடம் பெறுகின்றான். இவனது பெயராலேயே இம்மக்கள் தஙகளைத் தேவேந்திர குல வேளாளர் என்று அழைத்துக் கொள்கின்றனர்." [10]

"கொங்கு மண்டலத்தில் தேவேந்திரர்கள் பண்ணாடி, பலகன், பட்டக்காரர் என்றும் அழைக்கப்படுகின்றனர். கோவை அருகிலுள்ள பேரூர் பட்டீஸ்வரர் கோவில் புராண மரபுக் கதைப்படி சிவன், பார்வதி இருவரும் மள்ளனாகவும் (உழவர்) மள்ளத்தியாகவும் (உழத்தி) வயலில் இறங்கி உழவு செய்து நெல் நாற்று நடவு செய்ததாகப் பேரூர் புராணம் (பள்ளுப் படலம்) குறிப்பிடும். இதனை நினைவு கூர்கின்ற வகையில் இன்றும் பட்டக்காரர் பட்டம் பெற்ற தேவேந்திரர்களின் தலைவருக்குப் பட்டம் கட்டிய பின்னர் விழா நடைபெறுவதும், இவரின் தலைமையில் பொன்னேர் பூட்டி நாற்று நடவு என்று பெயர் பெறும் இந்திர விழா நடைபெறுவதும் இன்றும் இருந்து வருகின்றது. இந்த இந்திர விழாவைக் கோவை வட்டாரத்திலுளள தேவேந்திர குல வேளாளர் சமுதாயம் முழுவதும் இணைந்து பத்திரிக்கை அசசிட்டு, வீர விளையாட்டுக்கள் நிகழ்த்தி, பொன்னேர் பூட்டி உழவு செய்து நாற்று நடும நிகழ்ச்சியை நடத்தித் தங்களின் வேளாண் மரபையும் வீர மரபையும் விடாமல் காப்பாற்றி வருவதையும் இங்குச் சொல்லியாக வேண்டும். இதற்கும் மேலாக இந்திர விழாவுக்கென ஒரு நிரந்தரமான பட்டக்காரர் தலைமையிலான ஒரு குழு ஏற்படுத்தி இப்பகுதி மக்கள் செயல்படுவதும் நினைக்கத் தக்கது. இவ்இந்திர விழா குறித்து இப்பகுதி மக்கள் பாடும் பாடல்களின் வழி அ. ஜீவிதாமணி தேவேந்திர குல வேளாளர் குலச்சடங்குகள் எனும் தனது எம்.ஏ ஆய்வேட்டில் வருமாறு குறிப்பிடுவார். [3]

"சந்திரரே சூரியரே சாமி பகவானே
இந்திரனை நோக்கி எடுத்தேன் இளமுடியை (நாற்றுக்கட்டு)

தேவேந்திரர்கள் எல்லாம் சேரக் குலவையிடுங்கள்
தேவேந்திர ராஜனுக்கு
யானையின்னா யானை ஐராவதத்து யானை
பள்ளத்தைக் கண்டால் பதுங்குமாம் அந்த யானை
பட்டுக் கொடை பிடித்து நம்ம பாண்டியராஜா
பயிர் பார்க்க வாராங்க
நீலக் கொடை பிடிச்சு
நிலம் பார்க்க வாராங்க
பொன்னு மிதியடியை காலிலே தொட்டு
மதுரை பெத்த ராசா குதிரை பெத்து வாராங்க
மாடலூர் பொண்ணுக எல்லாம்
மதுர வாசல் திறங்கம்மா

*(ஜீவிதாமணி, மேலது, ப. 134)*

இங்கு இடம் பெற்றுள்ள பாடலடிகளில் தேவேந்திரர்களின் தெய்வமான இந்திரனை வணங்கி தேவேந்திரர்கள் உழவு வேலையைத் தொடங்குவதாகவும் அச்சமயம் இந்திரன் யானையின் மீது பவனி வருவதாகவும் வர்ணித்துவிட்டு இவ்வாறான இந்திரன் மரபில் வந்த பாண்டியர் மன்னர் (பண்ணாடி) வேளாண்மை நிலங்களைப் பார்க்கக் குதிரையில் வருவதாக இப்பாடலடிகள குறிப்பிடுகின்றன. மதுரை பாண்டிய மன்னன் வருகின்றான். பெண்களே நீங்கள் அவனை காண வாருங்கள் என்று அழைப்பதாக அப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. "ஐராவதம் என்னும் யானை இந்திரனின் வாகனமாகும். மேலும் இந்திரனின் இன்னொரு வாகனம் உச்சைச் சிரவம் என்னும் வெள்ளைக் குதிரையுமாகும்" [4] என்பதற்கேற்ப இநதிர விழாப் பாடலிலும் வெள்ளை யானையும், வெள்ளைக் குதிரையும் இடம் பெறுகின்றன."

"இந்திர விழாவெடுப்பது மழை வேண்டுதலை நோக்கமாகக் கொண்டது ஆகும். இதனைத்தான் சிலப்பதிகாரம் "பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்க" [5] என்று இந்திரனை வேண்டுவதாகக் குறிப்பிடும். இங்கு தேவேந்திரர்கள் பேரூர் கோயிலில் பாடும் இந்திரவிழா பாடலிலும் மழை வேண்டுதல் வருமாறு வர்ணிக்கப்படுகின்றது.

"மாமலை யெல்லாம் தண்ணி வர தண்டொதுங்கி
தளிர் ஒதுங்கி வருகுதாம் காவேரி
தாழ மடலொதுங்கி வருகுதாம் காவேரி
கெண்டை மீன்வாய் திறக்க
வருகுதாம் காவேரி

கெழுத்தி மீன் வாய் திறக்க
வருகுதாம் காவேரி
ஆறால் மீன் திறக்க
வருகுதாம் காவேரி
யாருக்குன்னு வாய் திறக்க
பட்டுக் கொடை பிடித்த
பாண்டிய ராசனுக்கு வாய்திறக்க
முத்துக் கொடை பிடிக்க முதலைக்கு வாய் திறக்க
என் கல்ல பொழந்து கருமணலை ஈடேத்தி
என் கன்னலுக்கு நீர் போக்கி
என் தேவ தேவேந்திரனுக்கு வாய் திறப்பேன்"

(*ஜீவிதாமணி, மேலுது, ப.* **142**)

என்றவாறு மழை வருகைப் பாடலில் மழை யாருக்காக வருகை தருகிறதாம் பாண்டிய மன்னனுக்காகவும் அவனது முன்னோரான தேவேந்திரனுக்குமாக மழை வருகின்றது என்று நீண்டு செல்லும் இப்பாடலில் தேவேந்திரன் மழை கொடுக்கும் கடவுள் என்றே வருணிக்கப்படுகிறார்" [10].

இந்திரனைப் பற்றிய பல செய்திகளில் முரண்பாடுகளும் இருக்கின்றன என்பர். வழிபாட்டு நிலையில் மழைக்கடவுளாகப் போற்றப்பட்ட இந்திரன் இடத்தை மாரியம்மன் பெற்றுள்ளதாகவும் ஆய்வுகள் எடுத்து மொழிகினறன.

எவ்வறாயினும் வேளாண் மக்கள் வயலில் வழிபாடு செய்தமையும், அறுவடைக் காலங்களில் மகிழ்ந்ததையும் ஒருசேரப் புலப்படுத்தப் பெறுகின்றன. பிற்காலத்தில் தோன்றிய பள்ளு நூல்களில் நூலெழுந்த கால மள்ளர் நிலைகள் படம் பிடிக்கப பெற்றுள்ளன. உழைப்பவர், உரிமையாளர் இருவருக்குமான அனைத்து வேறுபாடுகளும் இத்தகைய நூல்களில் பரவலாகக் காட்டப்படும். நிலத் தொழிலாளர்களின் வழிபாட்டுப் போக்கில் மாறுதல்கள் உண்டாகின என்றாலும் பழமையை அவர்கள் மறந்திருக்கவில்லை. சிலம்புக்காலம் போலவே இன்றும் உணவாக்கிப் படைத்தல் என்பது யாங்கும நடைமுறையில் உள்ளது. 'அறியப்படாத தமிழகம்' என்ற நூலின் ஆசிரியர் தொ. பரமசிவம் வேளாண் மக்கள் இன்றும் படையல் தரும் பாஙகினைக் கீழ்க்கண்ட வண்ணம் விளக்குகிறார்.

"நிலத தொழிலாளர்கள வணங்கும் சிறுதெய்வங்களில் சில ஊறவைத்த அரிசியினையும் முளைகட்டிய பயறு வகைகளையும் படையலாகப பெறுகின்றன. இவ்வகையான தெய்வங்கள் சமைத்த

உணவினைப் படையலாகப் பெறுவதில்லை. இவை உணவு சேமிப்பு சமூகத்தில் பிறந்த தெய்வங்களாக இருக்க வேண்டும்.

ஊர்த் தெய்வங்களுக்கோ, சாதித் தெய்வங்களுக்கோ, குல தெய்வங்களுக்கோ நடைபெறும் திருவிழாக்களில் பொங்கலிடும் மரபும் உண்டு. அனைவரும் ஒரே நேரத்தில் பொங்கலிடுகின்றனர். எரிபொருளாகப் பனை ஓலைகளை மட்டும் பயன்படுத்தும் வழக்கமே பரவலாகக் காணப்படுகிறது. பொங்கல் படையலும் இரத்தப் பலியும் சில கோயில்களில் சேர்ந்தே தரப்படுகின்றன. அவ்வகையான கோயில்களில் பலியிடப்படும் விலங்கின் இரத்தத்தைப் படைக்கப்படும் உணவின் மீது தெளிப்பது வழக்கமாக இருக்கிறது. பொங்கலையும் இரத்தப் பலியையும் தனியாக நடத்தும் கோயில்களில் பொங்கல் படையலை 'சைவப் படையல்', 'ஆசாரப் படைப்பு', 'சுத்தப் படைப்பு' என்று அழைக்கின்றனர். இரத்தப் பலியோடு கூடிய படைப்பு 'மாமிசப் படைப்பு' என்று அழைக்கப்படுகிறது.

ஒரு கோயில் வளாகத்தில் பல சிறுதெய்வங்கள் இருக்கும்போது ஐயனார் போன்ற ஒன்றிரண்டு தெய்வங்கள் இரத்தப்பலி பெறாத சுத்தமுகத் தெய்வமாக இருக்கும். இரத்தப் பலி தரும்போது அத்தெய்வங்களின் சந்நிதியைத் திரையிட்டு மறைத்து விடுவது வழக்கம்.

குமரி மாவட்டத்தில் சிறுதெய்வக் கோயில் திருவிழாக்கள் சிலவற்றை 'ஊட்டுக் கொடுத்தல்' (உணவு கொடுத்தல்) என்றே கூறுகின்றனர். பொதுவாக, இரத்தப்பலி கொடுப்பது திருவிழாவின் முடிவு நிகழ்ச்சியாகவே அமைகின்றது."

தாய்த் தெய்வங்கள் தம் மக்களைக் காக்க, அரக்க வடிவலான தீமையை ஆயுதந்தாங்கிப் போரிட்டு அழிக்கின்றன. விசயதசமி எனப்படும் புரட்டாசி மாத வளர்பிறைப் பத்தாம் நாளில் எருமைத்தலை அரக்கனைத் தாய்த் தெய்வம் போரிட்டு அழிக்கின்றது. இச்சடங்கு ஒரு பாவனையாக, பெரும்பாலும் கோயிலுக்குச் சற்றுத் தள்ளி அமைந்த ஒரு திடலில் நடக்கிறது. இந்தப் போர் நிகழ்ச்சி முடிந்தவுடன் போரிட்ட களைப்புத் தீர தாய்த் தெய்வத்திற்கு உழுந்தஞ் சுண்டலும் பானக்காரமும் படைக்கப்படும். தென் மாவட்டங்களில் ஒன்றிரண்டு கோயில்களில் மட்டுமே இது காணப்படுகிறது. பானக்காரம் என்பது புளியும் கருப்புக் கட்டியும் நீரில் கரைத்து ஆக்கப்பட்ட நீர் உணவு. அக்காலத்துப் போர்க் களத்தில் களைப் படைந்த வீரர்களுக்கு தரப்பட்ட உணவாக இது இருந்திருக்க வேண்டும்.

சிறு தெய்வ வழி பாட்டின் பல கூறுகள் தமிழர்களின் போர் நெறிகளோடு தொடர்புடையனவாகத் தோன்றுகின்றன. உழுந்தும்

பானக்காரமும் கூட அப்படி வந்த உணவுப் பழக்கம் என்றே கொள்ள முடிகிறது"[11].

இவை போன்ற கருத்துக்கள் மொழிகின்ற செய்திகள் வருமாறு :

1. இந்திரனை வழிபடுதல் இன்றளவும் தொடர்கிறது
2. தத்தம் கடவுளர்களை உடனிணைத்துக் கொண்டனர்
3. காலப்போக்கில் பழந்தெய்வங்கள் மறக்கப்பட்டன
4. வழிபாட்டில் புதிய கோணங்கள் எழுந்தன
5. உணவுப் படையல் முறை மாறவில்லை

இதனைப் பற்றி மேலும் அறிய "மருத நில வாழ் மக்களைப் போற்றும் தமிழிலக்கியங்கள்" என்ற கட்டுரைச் செய்திகள் வாய்ப்பளிக்கின்றன.

"நன்றியும், நெல்லும், நல்ல நிலத்தில்தான் விளையும் என்பர். நாகரீக வாழ்விற்காக ஐவகை நிலங்களாகப் பிரித்தான. அவற்றிற்கு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் மற்றும் பாலை எனப் பெயர் சூட்டினான். இவை அனைத்திற்கும் மருதநிலத் தலைமகனே தலைவன். தலைமையானவர் நெல்லும் நீரும் தேவேந்திரனருளால் வேளாண்மை கண்டான். வேளாண் வேந்தனானான், வேந்தனே இறைவனானான் எல்லோராலும் இறையெனப் போற்றும் சிறப்படைந்தான். அழகு தமிழன்னைக்கு ஆதி இறைவனாக திருமால், முருகன், இந்திரன், வருணன் மக்களின் சிவனாகிய கருணை வடிவம் கொண்டனர்".

"இறைவனின் தொழில் படைத்தல், காத்தல், அழித்தல என்ற மூன்றையும் முடிவிலாத விளையாட்டாக உடையவர் யாரோ, அவரே தலைவர். உலகம, உயிர், இறைவன் இந்த மூன்றும் எனறென்றும் நம்பிக்கையுடையது.

உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்
நிலை பெறுத்தலும், நீக்கலும், நீங்களா
அளகிலா விளையாட்டு உடையவர் அவர்
தலைவர் அனைவர்க்கே சரண் நாங்களே
(பாயிரம் - 1)

கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும் என்ற கல்வியிற் பெரியவன் 'கம்பன்' இந்நிலக் கடவுள்களின் பெருமையினைச் சிறப்பாகக் கூறுகிறார்.

"மாயோன் மேய காடுஉரை உலகமும்
சேயோன் மேய் மைவரை உலகமும்

வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று
சொல்லிய முறையான் சொல்லவும் படுமே"

*(தொல்காப்பியம், அகத்திணையியல் 5)*

*இதன் மூலம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலங்களுக்கும் தெய்வங்களாக மருதநிலக் கிழவர்கள் திருமால், முருகன், இந்திரன், வருணன் என்பவர்களே விளங்கியுள்ளனர். இவர்கள் தலைமக்களாக மதிக்கப்பட்டு சமய நேயத்துடன் கம்பன் வாக்குப்படி இவர்கள் மள்ளர் மரபினரே. மருத மக்கள் அவையத்து முதல்வர்கள் ஆனார்கள்.*

"பருதி வலவ பொருதிறன் மல்ல
திருவின் கணவ பெருவிறன் மள்ள"

*(பரிபாடல் - திருமால் பகுதி - 3 வரி 41)*

"செருவில் ஒருவ பொருவிறல் மள்ள

*(திருமுருகாற்றுப்படை, வரி 262)*

*மாயோன் - திருமால், சேயோன் - முருகன், மள்ளர் குல முதல்வர் தேவேந்திரர் உழத்தியர் இநதிராணியின் கணவர் என்பதாலும் இவர்கள் மள்ளர் குலத்தவர்கள் எனத் தெரிகிறது.*

*முல்லை, குறிஞ்சி நிலத்தில் ஆண்கள் ஆயர், வேட்டுவர் என்ற பெயர்களில் அழைக்கப்பட்டனர். அம்மக்களுக்கு தலைவர்களாக மருதநிலக் கிழவர்கள் இருந்துள்ளனர்.*

"ஆயர், வேட்டுவர் ஆடுத் திணைப் பெயர்
ஆவியின் வருஉம் கிழவரும் ஊரே"

*(தொல். அகத்திணை 23)*

*மருத நிலத்து மள்ளர் இனத் தலைமக்களான கிழவர், நானிலத்திற்கும் தலைமக்கள் என்பதை தொல்காப்பியச் சூத்திரங்கள் மூலம் அறியலாம். மேலும், சிவன்தான் பல உயிர்களுக்கும் நிறைந்தவனாகி நின்றான் என்றும் "சிவன்தான் சிவனுமாகி நின்றான் (திருமந்திரம் 448) எனறும் கூறும் பொருள் தெய்வேந்திரர்கள் சிறப்புக்கு ஆதாரமாகிறது"[12].*

*காலந்தோறும் விழாக்கள் மாறுபட்டமையை மேற்செய்திகள் புலப்படுத்துகின்றன. நிலத் தெய்வம் என்பது மாறுதல்களைப் பெறத் தொடங்கி மழை பெறுவதற்கான வேறு வழிமுறைகளில வழிபாடுகள்*

உருவாகிய போக்கையும் உடன்வைத்துப் பார்ப்பது தேவையாகின்றது. பண்டை மரபுகளையும் இப்போதைய மரபுகளையும் தொகுத்தும் வகுத்தும் பார்ப்பது பல வெளிச்சங்களை வழங்கக்கூடும்.

சங்க இலக்கியங்களில் காணப்பெறும் குறிப்புகளைக் கொண்டு இந்திரவிழாவினை நோக்குங்கால் புலனாகும் செய்திகளைக் கீழ்க்கண்டாங்கு வகைப்படுத்துவர்.

1. ரிக்வேத காலத்தில் மிகவும் பிரசித்தி பெற்ற பெருந்தெய்வமாக விளங்கியவன் இந்திரன். ரிக் வேதத்தில் நான்கில் ஒரு பகுதிப் பாடல்கள் (சுமார் 250) அவனைப் புகழுகின்றன. ஆனால், சங்க இலக்கியத்தின் அவன் நிலத் தெய்வங்களுள் ஒருவனாகவே கருதப் பெறுகிறான்; பெருந்தெய்வங்களுள் ஒருவனாக எண்ணப் பெறவில்லை. தொல்காப்பியம் "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்னும் தொடரால் அவனை மருத நிலத் தெய்வம் என்று குறிப்பிடுகிறது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் அவனை பற்றிய செய்திகள் மிகக் குறைவாகவே உள்ளன.

ஐங்குறுநூற்றில், இந்திர விழாவைப்பற்றிய குறிப்பு கிடைக்கிறது. எனினும் சங் காலத்தில் இந்திர விழா நடந்ததற்கான வேறு சான்றில்லை. சங்கம் மருவிய கால இலக்கியங்களான சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இந்திரவிழாவை பற்றி மிக விரிவாகப் பேசுகின்றன. எனவே கடைச் சங்கத்து இறுதிக்காலமான திருமுருகாற்றுப்படை பரிபாடல் காலந்தொட்டே இந்திரனை பற்றிய புராணச் செய்திகள் தமிழகத்தில் பரவத் தொடங்கின என்றும், இந்திரவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டதென்றும் அறிகிறோம்.

சங்க இலக்கியத்திம் சங்கம் மருவிய கால இலக்கியத்திலும் இந்திரனைப் பற்றி இவ்வளவே உள்ளன. இவைகளும் பெரும்பாலும் புராணச் செய்திகளாகவே உள்ளன. எனவே ஆராய்ச்சியாளர்கள் பரி பாடலும் திருமுருகாற்றுப்படையும் குறிப்பிடும் இந்திரன் ஆரியர் வழிபட்டு வந்த இந்திரன் எனறும், சிலப்பதிகாரமும், மணிமேகலையும் குறிப்பிடும் இந்திரன் சமண-பௌத்தரின் இந்திரன என்றும் கூறுகின்றனர். மேலும அவ்விரு இந்திரர்களும் வேறு; தொல்காப்பியம் குறிப்பிடும் "வேந்தன்" வேறு; வைதீக நெயியும், புறச் சமய நெறிகளும் தமிழகத்தில் வநது கலந்தபின், 'வேந்தன்' இந்திரனாகக் கருதப்பெற்றான் என்றும் கூறுகின்றனர்.

2. மருத நிலஙகளை ஆண்ட தமிழ் வேந்தர்கள் வழிபடட தெயவமே வேந்தன் எனவேதான், தொல்காப்பியம் "வேந்தன்" என்றும்

சிலப்பதிகாரம் "மன்னன" என்றும் இவனைக் குறிப்பிடுகின்றன. பிற்கால்த்தில 'மன்னன்' என்றும் இவனை குறிப்பிடுகின்றன. பிற்காலத்தில் தமிழ்-ஆரிய கலாசாரக் கலப்பு ஏற்பட்ட பின்னர் தமிழரின் ''வேந்தனும்'' ஆரியரின் இந்திரனும் ஒன்றாக இணைக்கப்பட்டனர் என்றும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்குப் பின் வந்த நூல்கள், வேதகால இந்திரன, புராண கால இந்திரன், தமிழ் நிலத் தெய்வமான வேந்தன், புறச் சமயங்கள் கூறும் இந்திரன் ஆகிய அனைவரையும் ஒன்றாகவே கொள்ளுகின்றன.

3. மழைவேண்டி இன்று நிகழும் வழபாட்டு, சடங்கு முறைகளை அரங்க. மு. முருகையன் பட்டியலிட்டுக் காட்டுவார். அப்பகுதி வருமாறு :

i) மக்கள் தம் வாழ்நாளில் மழை இன்மை, பஞ்சம், நோய்க் கொடுமை முதலானவற்றில் இருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும், வாழ்க்கை வளமையடையவும் பல தெய்வங்களை வணங்கினர். இன்றும் வணங்கி வருகின்றனர். இவ்வழிபாடுகள் பெரிதும் அச்சம் காரணமாகவும் நன்றி உணர்வு மேலோங்கியதன் காரணமாகவும் மேற்கொள்ளப் பெறுவதாகும்.

ii) வழிபாட்டு நிலைகள் நாகரிகமடைந்த மக்களிடம் சமய உணர்வோடும், புராணக் கூறுகளோடும் ஒன்றிணைந்து காணப்படுகின்றன. நாட்டுப்புற மக்களுடைய வழிபாடுகள் தொல்குடிகளின் பழக்க வழக்க வெளிப்பாடுகளாகக் காணப்படுகின்றன. இத்தகைய வழிபாடுகளில் தொன்மைக் காலமக்களின் வழிபாட்டுப் பழக்கவழக்கங்கள்முழுமையாக அல்லது எச்சமாகக் காணப்படுகின்றன. நிலமும் நிலத்தைச் சார்ந்த இயற்கை அமைப்புகளும் மானுட வாழ்வில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தின. உற்பத்தி கருவி களின் பெருக்கம் போன்றவை மக்களின் பழக்கவழக்கங்களை மாற்றியமைத்து வருகின்றன.

iii) பண்புடை மக்களுடைய வழிபாட்டு நிலைகளில் மழை வேண்டி வழிபாடு செய்வதை இரண்டு வகையாகப் பகுக்கலாம்.

அ. பாடல்களில் மூலம் இறைவனை வேண்டி வானத்திற்கு ஆணையிட்டு மழையைத் தர வேண்டுதல்.

ஆ. சடங்கு வழிபாட்டுப் பழக்கவழக்கங்களின் மூலம்

தெய்வத்தினை வேண்டுதல்.

## பாடல்களின் வழி மழை வேண்டல்

உயிரினங்களுக்குத் தேவையான மழை இல்லையெனில் அவை வாழ்தல் கடினம். எனவே மக்கள் மழைக்குரிய தெய்வத்தை வணங்கி அதற்கென்று தனிப்பட்ட வழிபாட்டு முறைகளையும் கடைப்பிடித்து வாழ்ந்தனர்; இன்றும் வாழ்ந்து வருகின்றனர்.

4. பண்டைய காலம் தொட்டு இன்றுவரை மழையின் தேவை உயிரினங்களுக்கு மட்டுமின்றி மனித வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்றது. மழை பொய்ப்பின் மாந்தர் நலம் கருதி மழைக் கடவுளான சிவனையும், இந்திரனையும் வேண்டினர் என்பதைப் பின்வரும் பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

கருவாகியோடும் முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
காராகிநின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

மேற்கண்ட பாடல்களில் மழைதரும் முகிலோடு சிவபெருமானையும் சேர்த்துக் கூறுவதால் மழைவேண்டிச் சிவனை வணங்குவதன் மூலம் கருமுகில் மழையாகப் பெய்யும் என மக்கள் நம்பியதை அறியமுடிகின்றது.

5. இலக்கிய வரலாற்றில் பிற்காலத்திய பள்ளு நூல்கள் மழைவேண்டிப் பல்வேறு தெய்வங்கள் வணங்கப்பட்டமையை எடுத்தியம்புகின்றன.

1. கதிரைமலைப் பள்ளு - வருணனையும்
2. பறாளை விநாயகர் பள்ளு - பரஞ்சோதி விநாயகரையும்
3. தண்டிகை கனகராயன் பள்ளு - வருணனையும்
4. திருமலை முருகன் பள்ளு - சதவிதமா நாயகரையும்

சுட்டிக்காட்டி, மக்கள் மழைவேண்டி இத்தெய்வங்களை வழிபட்டனர் என்பதைத் தெரிவிக்கின்றன. மழைவழிபாடு தொடக்கத்தில் இயற்கை வழிபாடாகவும் பின்னர் அது உருவ வழிபாட்டோடு தொடர்புபடுத்தப் பட்டதாகவும் வளர்ந்து வந்துள்ளது. மக்கள் வாழ்வில் இடம்பெறும் சமய நிலையின் வளர்ச்சிக்கேற்ப இவ்வழிபாட்டுக் கூறுகள் மாற்றம் பெற்றுள்ளன. தொடக்க காலத்தில் சிவன், இந்திரன், வருணன் முதலானவர்களோடு தொடர்புபடுத்தப்பட்ட மழை வழிபாடு பிற்காலத்தில் பத்தினிப் பெண்களைத் தொழுவதாலும் மழைபொழியும் என நம்பிக்கையை ஏற்படுத்தக் காரணமாயிற்று. பின்னாளில் விநாயகரை வழிபடுவதாலும்

மழைபொழியும என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவி உள்ளதைப் பள்ளு நூல்கள் வழி அறிய முடிகின்றது. இது வட்டார வழிபாட்டுத் தன்மையின் வழி ஏற்பட்ட ஒரு தாக்கமெனக் கருதவியலும்.[14]

இச்செய்திகள் உணர்த்தும் கூறுகளில் அடிப்படையனது தெய்வங்கள் மாறிமாறி வணங்கப் பெற்றுள்ள போக்கு ஆயினும், அவையாவும் மழையையே முன்னிறுத்திப் பேசியுள்ளன என்பது அடிக்கோடிட்டுக் காண வேண்டிய ஒன்றாகும்.

இலக்கியச் செய்திகளுக்கு அப்பால் கல்வெட்டு, நடைமுறைச் செய்திகள் ஆகியவற்றையும் பார்ப்பது தேவையாகின்றது. கொங்கு நாட்டில் திருக்கோயில் வழிபாடுகளில் காணப்பெறும் மரபுகளை எடுத்துக் கூறும் தே. ஞானசேகரன் இறைவனே பள்ளனாக வந்து பயிர்வளர்த்து நின்றதாக வரும் இலக்கிய, வழிபாட்டு சடங்குச் செய்திகளைக் கூறுகின்றார். அவருடைய களஆய்வுச் செய்திகள் புலப்படுத்தும் செய்திகளில் பண்டைய மள்ளர் மரபுகளின் எச்சங்கள் பல்வேறு வகையில் இன்றளவும் தமிழக உழவர்களிடம் காணப்பெறுவதாக வரும் குறிப்பு வலுவானது. ஆதாரங் கொண்டது. கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துவரும் மரபுகளை மீட்டுருவாக்கம் செய்ய வேண்டியதன் இன்றியமையாமையைக் கோவையிலுள்ள தமிழர் பண்பாடு, சமூக ஆய்வு மன்றம் உணர்ந்து செயல்படுகின்றது. அதன் பணிகளில ஒன்றாக "மள்ளர் மலர்" இதழ் வெளியீட்டைக் குறிக்க வேண்டும். பதச் சோறாக ஒரு கட்டுரைச் செய்தி தரப்படுகிறது.

**நீண்ட கட்டுரையொன்றின் மையப்பகுதி வருமாறு**

"மருத நில மக்களான மள்ளாகள் நெல்லின் மக்கள் என்றும் செந்நெல் முதுகுடியினர் என்றும் ஏருடன் பிறந்தவர்கள் என்றும் மழையின் மைந்தர்கள் (இந்திரனின் மக்கள்) நீராணிக்கர் என்றும் பண்டைக் காலந்தொட்டு இன்றுவரை புகழப்படுபவர் ஆவர். இம்மக்களின் முன்னோரே நெல்லினை முதன் முதலில் இப்பூவுலகில் பயிர் செய்தவர் ஆவர். இதனால் நெல்பயிரிட்ட மருத நிலத்தின் உழவர் தலைவன் வேளிர் என்று அழைக்கப்பட்டான். இவனே மருதநிலத்தில் முதன் முதலில் அரசைத் தோறறுவித்து வேந்தன் எனறு பெயர் பெறுகின்றான். இந்த வேந்தன் பின்னாளில் தேவேந்திரன் ஆனான். இத்தேவேந்திரனின் வழிவந்த மள்ளர் (உழவர்) களே இன்று தேவேந்திர குல வேளாளர் என்று பெயர் பெறுபவர் ஆவர். இம்மக்களின் முனனோரே நெல்லைக கண்டுபிடித்தனர் என்பதற்குப் பல புராணக் கதைகளும், நாட்டுப்புற வழக்காறுகளும் கல்வெட்டுச் சான்றுகளும் இலக்கியச சான்றுகளும் காணப்படுகின்றன.

நெல் வேளாண்மையைச் சிறப்பிக்கும் பொருட்டு எழுந்த உழத்திப்பாட்டு, பள்ளுப் பாட்டு முதலியன இதற்குச் சான்றாகும். செஙகோட்டுப் பள்ளு நூலில் தேவேந்திர குல முதல்வன் மூவேந்தரின் வேண்டுகோளின் படி தேவலோகம் சென்று நெல் பயிரைக் கொண்டு வந்து பூமியில் பயிர் செய்ததாகக் கூறுகின்றது. (பாடல் 203 -208). பழனிச் செப்புப் பட்டயமும் இதனையே உறுதிச் செய்கின்றது.

இடைக்காலத்தைச் சேர்ந்த கரிவலம்வந்த நல்லூர்க் கல்வெட்டில் (ARE 432/1914) இம்மரபினர் பாணடியன் உக்கிரப் பெருவழுதியால் தேவலோகத்திலிருந்து சென்னெல், கன்னெல், கதலி, பனை முதலிய விதைகளுடனும் காளையுடனும் பூமிக்கு அழைத்து வரப்பட்டதாகவும் அவர்கள் ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகளைத் தோண்டி வேளாண்மை கண்டு நாட்டைச் செழிப்பித்தாகக் கூறுகின்றன.

1. வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன் ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாக விவசாயத்தை விடாமல் செய்து வரும் ஒரே சமூகம் உண்டென்றால் அது பள்ளர்கள்தான் என்று கூறுவார்.

2. கோவை பேரூரிலுள்ள பட்டீஸ்வரா மள்ளராக மாறி நெல் நடவு தெய்ததைக் கூறும் பேரூர் புராணத்தில் இடம் பெறும் பள்ளுப் படலம் இங்கு நினைக்கத் தக்கது.

3. நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது என்று பழமொழியும் மள்ளர் வீட்டிலே நெல்லு கிடந்தது மாதிரி என்னும் பழமொழியும் இம்மக்களிடம் வழக்கிலுள்ள உழவு தொடர்பான பாடல்களும், நெல் அளவைப் பாடல்கள், ஏர் மங்கலப் பாடல்கள் முதலியனவும் இம்மக்கள் நெல் வேளாண்மைக்கு உரியவர்கள் என்பதற்குச் சான்றாகத் திகழ்கின்றன”[15].

இலக்கியங்கள் கூறும் வழிபாடு, சடங்குமுறைகள் மாற்றங்களைக் கண்டு இன்று வேறுவகையில் நிகழத்தப் பெறுவதைக் கள ஆய்வுச் செய்திகளும் பிறவும் கூறுகின்றன. இனறு இடம்பெறும் பாடல்கள், இலக்கியங்கள் இவற்றில் இதிகாசங்கள- குறிப்பாக இராமாயணம் இடம் பெறுவதை மேலோட்டமாகக் காணும்போதே புரிந்து கொள்ளலாம். இச்செயதிகளைக் குறிப்பாகக் காட்டும் கட்டுரை ஒனறு இராமாயணச் செய்திகள் பள்ளு நூல்களில இடமபெறுமாறறை விளக்குகினறது.

“17ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கூறப்படும 'முக்கூடற் பள்ளு' எனும் நூலில் 175 பாடலகள் உளளன. இவறறுள் இராமாயணக கதை நிகழ்சசிகள் குறிபபிடப்படுகின்ற 12 பாடல்களைக் கீழ்க்கண்ட பகுப்பில் அடைக்கலாம்.

| காண்டங்களின் பெயர்கள் | பள்ளுநூலின் பாடல் எண்கள் |
|---|---|
| 1. அயோத்தியா காண்டம் | 128, 134, 167, 168 |
| 2. ஆரணிய காண்டம் | 128, 161 |
| 3. கிட்கிந்தா காண்டம் | 110, 165 |
| 4. சுந்தர காண்டம் | 67 |
| 5. யுத்த காண்டம் | 68, 69, 111, 113, 164 |

இந்நூலில் பாலகாண்டம் நிகழ்ச்சிகள் குறிப்பிடப்படவில்லை. இவ்விலக்கியத்தில் இடம்பெறும் பாத்திரங்கள் நால்வராவார். இவருள் பள்ளன், மூத்தப்பள்ளி, இளைய பள்ளி எனும் மூவரும் உழைக்கும் வர்க்கத்தின் பிரதிநிதிகள்; பண்ணைக்காரன், அதிகார வர்க்கத்தின் அங்கத்தினன். இந்நூலைப் படைத்தவன் இராமாயணக் கதை நிகழ்ச்சிகளை உழைப்போர் கூற்றாக மட்டுமே அமைத்திருப்பது சிந்தனைக் குரியதாகும். வறுமையினையே செல்வமாகக் கொண்டோரின் மனத்துயர் தீர்க்கும் மருந்தாகவும் இராமாயணக் கதை இலங்குமாற்றை இதன்வழி ஆசிரியர் உணர்த்தி விடுகிறார். பள்ளர் தம் கூற்றுகளைக் கீழ்கண்டவாறு பகுக்கலாம்.

| | | |
|---|---|---|
| பள்ளன் கூற்று | - | 67, 68, 69, 110, 111 |
| மருதூர்ப் பள்ளி கூற்று | - | 161, 164, 165, 167, 168 |
| பள்ளியர் கூற்று | - | 128, 138 |

உழவர் மனத்தை உழுது நிற்கும் இராமாணக்கதை நிகழ்ச்சிகளை இனிக் காணலாம்.

இராமன் கைகேயியின் வஞ்சனையால் கானகம் செல்ல நேர்ந்ததை,

"முடியுஞ் சூடாமலே கை
கேசி தன்னவே - காட்டில்.
முன்பு தள்ளிப் போனானுங்கள்
மூர்த்தியல் லோடி"

என்ற வரிகளும்,

இராமன் வனவாசத்திற்கென, சடாமுடியும், மரவுரியும் தரித்து நின்றதை,

"கற்றைச் சடை கட்டிமர
வுரியுஞ் சேலைதான் - பண்டு

கட்டிக் கொண்டான் உங்கள் சங்குக்
கையனல்லோடி"

என்ற வரிகளும் குறிப்பிடுகின்றன.

இதுகாறும் தொகுக்கப் பெற்ற செய்திகளில் துல்லியமான விடைகள் கிடைக்கப் பெறாதிருக்கலாம். ஆயினும் கால வளர்ச்சியில் மள்ளர்கள் மேற் கொண்டிருந்த பண்பாட்டு மரபுகளும், வழிபாடுகளும், சடங்குகளும் புலனாகின்றன. பண்டைய இலக்கியம் தொடங்கி மள்ளர்களின் இலக்கியமெனப் பேசப்பெறுகின்ற பள்ளு இலக்கியங்கள் வரை பற்பல செய்திகளைப் பெறமுடிகின்றது. இதரவகைச் சான்றுகளையும் உடனிணைத்துப் பார்க்குங்கால் மள்ளர்களின் வரலாற்றுப் பதிவுகள் மேலும் பளிச்சிடுவதற்கு வாய்ப்புண்டு. கம்பனும் தன் பங்களிப்பாகத் தன் காப்பியத்தில் மள்ளர்தம் மாண்புகளை முறைப்படியாக வழங்கியுள்ளமையை உணர்ந்து போற்றுதல் வேண்டும்.

மருத நில மக்களாக வாழ்க்கையைத் தொடங்கிய மள்ளர்கள் சங்க காலத்தில் வாழ்ந்த முறைமை, காலப்போக்கில் பெற்ற மாறுபாடுகள், மள்ளர்களுக்கென்றே இலக்கியங்கள் மலர்ந்தமை, சமூக ஏற்றத் தாழ்வுகளுக்கு மள்ளர்களும் இலக்கானவை, அரசியல், பொருளாதாரச் சிக்கல்களில் மள்ளர்கள் பெற்ற இடம், இன்றைய மள்ளர்களின் வழக்காறுகள் ஆகியவற்றைக் கால ஒழுங்கிட்டு நிரல்படுத்தும் போது தமிழரின் இனவரலாறு பொலிவடையும். கம்பன் தன்கால மள்ளர் மாண்புகளைக் கம்பராமாயணத்தில் எழிலுறப் பாடியிருப்பதை வரலாற்றுத் தேவைக்காகவும் பிறவற்றுக்காகவும் பன்முறை பயில்வது நலந்தரும். மள்ளரின் மாண்புகளைப் பாவடிவில் தந்த கம்பனுக்குத் தமிழுலகு கடன்பட்டிருக்கிறது. அதனால் அவனை வாழ்த்தி வணங்குகிறது.

## சான்றெண் விளக்கம்


1. இரா. சாரங்கபாணி, திருக்குறள் உரைவேற்றுமை, பொருட்பால், ப. 464 - 465.

2. மு. சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 17 - 24.

3. க. இராமச்சந்திரன், 'இந்திரன் விழா', மணிமேகலைச் சிந்தனைகள், ப. 24 - 29.

4. நாரண துரைக்கண்ணன், 'இந்திர விழா' கையேடு, ப. 307.

5. தே. லூர்து (ப.ஆ.) நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் ப. 180.

6. கே. ஏ. குணசேகரன், மேற்கோள், நாட்டுப்புற நடனங்களும் பாடல்களும், ப. 119.

7. மேலது., ப. 16

8. சா. வளவன, நாட்டுப்புறவியல் கட்டுரைகள், ப. 65 - 66.

9. மேலது., ப. 67 - 68.

10. மாரியப்ப மள்ளர், 'இந்திரவிழாவும் தேவேந்திரர்களும்' தமிழர் பண்பாட்டு வரலாறு, ப. 157 - 1996.

11. தொ. பரமசிவம், சிறு தெய்வங்களின் உணவு, அறியப்படாத தமிழகம், ப. 114 - 115.

12. பரமசிவம், 'மருதநில வாழ் மக்களைப் போறறும் தமிழிலக்கியஙகள்', தமிழர் பண்பாடு வரலாறு, தொகுதி 2, ப. 107 - 1998.

13. அகர முதலவன், சங்க இலக்கியத்தில் இந்திரன் வழிபாடு இ.ப.த.ம 12 ஆவது கருத்தரஙக ஆய்வுக் கோவை ப. 1 - 4.

14. அரங்க மு. முருகையன், வரலாறறு நோக்கில் மழை வழிபாடு, இ.ப.த.ம. 25 ஆவது ஆய்வுக் கோவை, இரண்டாம் தொகுதி, ப. - 1142.

15. தே. ஞானசேகரன், நெல சார்ந்த கைவினைக் கலைப் பொருட்கள், மள்ளர் மலர், சனவரி 99.

16. மேகலா, உழவர் இலக்கியத்தில் இதிகாசம், இ.ப.த.ம. 28வது ஆய்வுக் கோவை, ப. 1248.

## மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் பற்றிய வரலாறு மற்றும் பண்பாட்டு ஆய்வு நூல்கள்


1. இரா. தேவஆசிர்வாதம், மூவேந்தர் யார்?, ஜூலை 1997, இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர் - 613 007.

2. இரா. தேவஆசிர்வாதம், வேளாளர் யார்?, ஜனவரி 1981, இராமதேவன் பதிப்பகம், 180 யாகப்பா நகர், தஞ்சாவூர்-613 007.

3. இரா. தேவஆசிர்வாதம், பள்ளர் அல்ல, மள்ளர் ஆம் மன்னர், 1991 இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர் தஞ்சாவூர்-613 007.

4. இரா. தேவஆசிர்வாதம், மூவேந்தர் யார் (திருந்திய பதிப்பு), 1992 இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர்-613 007.

5. இரா. தேவஆசிர்வாதம், தமிழ் மூவேந்தர் மரபினரான தேவேந்திரர் வீழ்ச்சி, 1998, இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர் - 613 007.

6. முனைவர் குருசாமி சித்தர், தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) 1993 தேவேந்திர மன்றம், 5/1 குருசாமி நகர், கோயமுத்தூர்-641 046.

7. முனைவர் குருசாமி சித்தர், முனைவர் தே. ஞானசேகரன், (ப.ஆ), தமிழர் பண்பாட்டு வரலாறு தொகுதி 1 1996 (33 அறிஞர்களின் கட்டுரைத் தொகுப்பு) 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

8. முனைவர் குருசாமி சித்தர், முனைவர் தே. ஞானசேகரன் (ப.ஆ) தமிழர் பண்பாட்டு வரலாறு தொகுதி 2 1998 (40 அறிஞர்களின் கட்டுரைத் தொகுப்பு), 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

9. முனைவர் தே. ஞானசேகரன், தலித் சிந்தனை விவாதம், 1999, மாமன்னர் பதிப்பகம், 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

10. முனைவர் சு.வேங்கடராமன், பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள், 1998, தேவேந்திர மன்றம், 5/1 குருசாமி நகர், கோயமுத்தூர்-641 046.

11. முனைவர் குருசாமி சித்தர், (ஆ), மள்ளர் மலர், தமிழ் திங்களிதழ், 1995 சனவரி முதல் தொடர்ந்து வெளிவருகிறது. தேவேந்திர குல வேளாளர் சங்கம், 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.

12. முனைவர் அ. அறிவுநம்பி, கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு, 1999 தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், 10/2 நால்வர் நகர், கோயமுத்தூர்-641 046.-

* * *

